# தென்னாட்டு வாசகம்

ஐந்தாம் வகுப்பு



னாட்டுப்பதிப்பகம்
சென்னை-1



BALU BROS

# தென்னாட்டு வாசகம்

## ஐந்தாம் வகுப்பு




ஆசிரியர்கள் :
புலவர் மா. நன்னன்
புலவர் த. முருகேசன்

[Paper used : 32 lbs. White Printing.]

தென்னாட்டுப் பதிப்பகம்
16, பிராட்வே : : சென்னை-1

 1959 [விலை ரூ. 1·00

# முன்னுரை

இப்பாட நூல் அரசியலாரின் புதிய பாடத்திட்டத்தை முற்றிலும் தழுவி அமைக்கப்பட்டுள்ளது.

குழந்தையுள்ளத்தினியல்பு, குழந்தைகளின் இயற்கையறிவு, பொருளறிவு, மொழித்திறன் ஆகியவற்றை உட்கொண்டும், படிப்படியாகவும், இயல்புக்கு முரண்படாமலும், வளர்ச்சிக்கு வாய்ப்பளித்தும் இந்நூல் எழுதப்பட்டுள்ளது. அறிந்தவற்றிலிருந்து அறியாதனவற்றிற்கு ஆர்வம் குன்றுமல் அழைத்துச் செல்லல் எனும் சீரிய இயல்பு முறையும் இந்நூலில் அமைந்திருத்தல் உணரக் கூடும்.

மொழிப் பாடத்தில் மொழியறிவுக்கு முதலிடமும், பொருளறிவு முதலிய பிறவற்றிற்கு அடுத்த அடுத்த இடங்களும் நல்குதல் இன்றியமையாதது. எனவே, மொழிப் பாடத்தில் மொழிப் பயிற்சிகள் மிகுதியாகத் தரப்படுவது இன்றியமையாததாகும். இந்நூலில் பயிற்சிகள் வேண்டிய அளவு கொடுக்கப்படாமல் இயன்ற அளவே கொடுக்கப்பட்டுள்ளன. ஆதலின், கற்பிக்கும் ஆசிரியர்கள் அவை போன்ற வேறு பயிற்சிகளை மிகுதியாகக் கொடுத்தால் மொழிப்பாடத்தின் நோக்கம் முற்றிலும் ஈடேறுவது திண்ணம்.

ஆசிரியர்கள்

# பொருளடக்கம்

எண் பக்கம்

## செய்யுட் பகுதி

## நாட்டு வணக்கம்

ஜன கண மன அதிநாயக ஜயஹே
    பாரத பாக்ய விதாதா

பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
    த்ராவிட உத்கல வங்கா,

விந்த்ய ஹிமாசல யமுனு கங்கா
    உச்சல ஜலதி தரங்கா,

தவ சுப நாமே ஜாகே,
    தவசுப ஆசிஷ மாங்கே

காயே தவ ஜய காதா,

ஜன கண மங்கள தாயக ஜய ஹே
    பாரத பாக்ய விதாதா,

ஜய ஹே! ஜய ஹே! ஜய ஹே!
    ஜய ஜய ஜய ஜய ஹே!

—இரவீந்திரநாத தாகூர்

## பொருள்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
    மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிருய்.

நின் திருநாமம், பஞ்சாப்பையும், ஸிந்துவையும்,
    குஜராத்தையும், மஹாராஷ்டிரத்தையும்,

திராவிடத்தையும், ஒரிஸாவையும், வங்காளத்தையும்
    உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.

அது விந்திய, ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;
    யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது;

இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.
    அவை நின் ஆசியை வேண்டுகின்றன;

நின் புகழைப் பாடுகின்றன;
    இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு

வெற்றி! வெற்றி! வெற்றி!

# ஐந்தாம் வகுப்பு

---

## 1. தாய்மொழி

மாணவர்களே! ஒரு தாய் தன் குழந்தைக்கு முதன் முதலில் எம்மொழியில் பேசக் கற்றுத் தருகிருளோ அம் மொழியே அக்குழந்தைக்குத் தாய்மொழி எனப்படும். தாய் கற்பிக்கும் மொழி தாய் மொழியாகும்; அல்லது நம்மைப் பாலூட்டிச் சீராட்டி வளர்ப்பவளை நமது தாய் என்பது போல, நமது அறிவை வளர்க்க உதவும் மொழியை நமது தாய் மொழி என்கிருேம் என்பதும் பொருந்தும். நமது தாய் நாம் சிறு குழந்தையாய் இருந்த பொழுது நமக்குக் கற்பித்த மொழி எது? தமிழல்லவா? ஆகவே தமிழ் மொழியே நமக்குத் தாய் மொழியாகும்.

நமது தாய் மொழியாகிய தமிழ் எத்தனையோ ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர்த் தோன்றியதாகும். அது தோன்றிய காலத்தை எவராலும் கண்டுபிடிக்க இயலவில்லை. அதனேடும், அதற்குப் பிறகும் தோன்றிய எத்தனையோ மொழிகள் மறைந்துவிட்டன. நமது தமிழ் தோன்றிய காலத்திலேயே தோன்றிய மொழிகளில் ஒரு சிலதான் இப்போதும் இருக்கின்றன; ஆனல் அவை களைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள் யாரும் இல்லாததால் அவையும் பெரும்பாலும் அழிந்து போன மொழிகளாகவே எண்ணப்படுகின்றன.

தமிழ் மிக மிகத் தொன்மை வாய்ந்த மொழியென் றும், இக்காலத்திலும் வாழ்கின்ற மொழியென்றும் அறிந்த நாம், அது மிகவும் இனிமையான மொழி என் பதையும் உணர வேண்டும். நமது மொழியின் பெய ராகிய தமிழ் என்ற சொல்லுக்கே இனிமை என்பது பொருளாகும். நீங்கள் பெரியவர்களான பின் வேறு மொழிகளையும் படிப்பீர்கள். அப்போது அவைகளை

யெல்லாம்விட நமது தமிழ் மிகவும் இனிமை வாய்ந்திருப்பதை உணர்வீர்கள்.

தமிழ் மிக்க இனிய மொழியாய் இருப்பதற்குப் பல காரணங்களுண்டு. அவற்றில் முதன்மையான காரணம் தமிழில் பல சிறந்த இலக்கியங்கள் இருப்பதேயாகும். உலகத்தில் வேறு எம் மொழியிலும் இல்லாத மிகவும் சிறந்த நூல் நமது மொழியிலுள்ள திருக்குறள் என்னும் நூலாகும். மற்றும் தொல்காப்பியம், சிலப்பதிகாரம், கம்பராமாயணம் முதலிய பல நூல்களும் தமிழில் உள்ளன. அவற்றை யெல்லாம் நீங்கள் மேல் வகுப்புக்களில் படிப்பீர்கள்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த நமது தாய் மொழியைப் போற்றி வளர்த்தல் நமது முதற் கடமையாகும். நாம் அழிந்தாலும் நமது மொழி அழியாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். மாணவர்களாகிய நீங்கள் நிறைய நூல்களைப் படிக்கவேண்டும். பேசும்போதும் எழுதும்போதும் அழகாகவும், திருத்தமாகவும் பேசவும் எழுதவும் வேண்டும். இதுவே நீங்கள் தமிழ் மொழிக்குச் செய்யும் தொண்டாகும்.

## பயிற்சி

**1. விடை எழுது :**

1. நமது தாய் மொழி எது? அதனைத் தாய் மொழி என ஏன் கூறுகிறோம்?

2. தமிழ் மொழியின் சிறப்புக்கள் யாவை?

3. தமிழ் மிக்க இனிய மொழியா யிருப்பதற்குக் காரணம் யாது?

4. தமிழ் மொழியிலுள்ள சில இலக்கியங்களைக் கூறு.

5. தமிழ் மொழிக்கு நீங்கள் செய்ய வேண்டிய தொண்டு யாது?

**2. கீழுள்ள சொற்களைத் தொடர்களில் அமைத்து எழுது :**

பாலூட்டிச் சீராட்டி, தோன்றியது, பெரும்பாலும், தொன்மை, உணர்வீர்கள்.

3. பிரித்து எழுது :

முதன்முதலில், குழந்தையாயிருந்த, தாய்மொழியாகும், மொழிகளாகவே.

4. தடித்த எழுத்திலுள்ள சொற்களுக்குப் பதிலாக அதே பொருளைத் தரும் வேறு சொற்களை எழுது :

1. **தாய் கற்பிக்கும்** மொழியே தாய் மொழி.
2. **எவராலும் கண்டு** பிடிக்க **இயலவில்லை.**
3. **தமிழ்** மிகமிகத் **தொன்மை** வாய்ந்த மொழி.
4. **தமிழ்** இனிய மொழி என்பதை **உணரவேண்டும்.**
5. **இத்தகைய சிறப்பு** வாய்ந்தது நமது மொழி.

# 2. திருவள்ளுவர்




திருவள்ளுவரைப்பற்றி நீங்கள் கேள்வியுற்றிருப்பீர்கள். அவரால் இயற்றப்பட்ட ஒப்பற்ற நூல் திருக்குறளாகும். கிறித்தவர்களுக்குப் பைபிள் என்னும் நூலும், முகமதியர்களுக்குக் குரான் என்னும் நூலும் வேதங்களாக இருப்பதைப் போன்று தமிழர்களாகிய நமக்குத் திருக்குறளே வேதமாகும். அதனாற்றான் அதனைத் ‘ தமிழ் மறை ’ என்கிறோம். நீங்கள் அதிலிருந்து சில குறள்களை செய்யுட் பகுதியில் கற்பீர்கள்.

திருவள்ளுவரின் பிறப்பைப் பற்றியும், அவரது வரலாற்றைப் பற்றியும் பலவிதமான கதைகள் வழங்குகின்றன. ஆதி என்ற தாய்க்கும், பகவன் என்ற தந்தைக்கும் பிறந்தவர் திருவள்ளுவர் என்றும், இவருடன் கபிலர், ஔவை முதலிய ஏழு பேர் பிறந்தனர் என்றும் கூறுவ

துண்டு. ஆயினும், இக் கதைக்குச் சரியான ஆதாரம் இல்லாததோடு, இது பொருத்தமானதாகவும் இல்லாத தால் இதனை உண்மை என்று நம்புவதற்கில்லை. எனவே திருவள்ளுவரைப் பற்றிய உண்மை வரலாறு எதுவும் இதுவரை கிடைக்கவில்லை என்பதே சரியானதாகும்.

ஆனால், அவரால் எழுதப்பட்ட திருக்குறளிலிருந்து அவர் ஒரு தலைசிறந்த அறிஞர் என்பது தெரிகிறது. சாதி, மத வேறுபாடுகள் எதுவும் அவருக்கு இருந்ததாகத் தெரியவில்லை. எல்லா மதத்தவருக்கும், எல்லா நாட்ட வருக்கும், எல்லா இனத்தவருக்கும் பொதுவான நீதி களையே அவர் கூறியுள்ளார். உழவுத் தொழிலிலிருந்து, நாட்டையாளும் அரசுத் தொழில்வரை உள்ள எல்லா வகை யான அறிவும் அவருக்கு இருந்ததனால்தான் திருக்குறளில் மக்களுக்கு வேண்டிய எல்லாக் கருத்துக்களையும் அவரால் கூற முடிந்தது. திருக்குறளில் கூறப்படாத கருத்து எதுவுமே இல்லையெனலாம்.

கடைத்தெருவில் பலவிதமான கடைகள் இருப்பதை நீங்கள் கண்டிருப்பீர்கள். ஒரு கடையில் துணிகள் மட் டும் இருக்கும். இன்னொரு கடையில் பழங்கள் இருக்கும். வேறொரு கடையில் இரும்புப் பொருள்கள் கிடைக்கும். மற்றொரு கடையில் பித்தளை, செம்பு முதலியவற்றாலான பாத்திரங்கள் விற்கப்படும். பிறிதொரு கடையில் மிளகாய், புளி முதலிய உணவுப் பண்டங்கள் கிடைக்கும். அவ்வாறே நூல்களிலும் பலவகையுண்டு. ஒவ்வொரு நூலிலும் ஒன்றிரண்டு கருத்துக்கள் மட்டுமே கூறப்பட் டிருக்கும். ஆனால் நமது அரும் பெருஞ் செல்வமாகிய திருக்குறளோவெனில், எல்லாவிதமான பொருள்களும் விற்கப்படும் கடையைப் போல், மக்கள் வாழ்க்கைக்கு வேண்டிய எல்லாவகையான கருத்துக்களையும் கொண்ட தாக விளங்குகிறது.

திருக்குறளை ஆங்கிலம் முதலிய பல வெளிநாட்டு மொழிகளிலும் மொழிபெயர்த்து எல்லா நாட்டவரும், எல்லா மதத்தவரும் படித்துப் பயனடைகிறார்கள். திருக் குறளைப் படித்த வெளிநாட்டறிஞர்கள் அனைவரும்

இதனைப் போன்ற ஒரு நூல் உலகத்தில் வேறு எங்கும் இல்லை என்று வியந்து பாராட்டியுள்ளனர். திருவள்ளு வரைப்பற்றி நம்மால் ஒன்றும் அறிந்துகொள்ள முடிய வில்லையாயினும், அவரது பெரு நூலாகிய திருக்குறளைப் பற்றியாவது நாம் தெரிந்துகொள்ள வேண்டாமா? திருக் குறளைப் படிக்காதவனும் தமிழனுவானு? எனவே, நாம் அனைவரும் நமது மறை நூலாகிய திறக்குறளைக் கற்போ மாக; கற்று அதன்படி ஒழுகுவோமாக. அவ்வாறு செய் தால் நாம் உலகில் தலைசிறந்த மக்களாகத் திகழ்வது உறுதி. திறக்குறளறிவு பரவுக; திருவள்ளுவர் புகழ் ஓங்குக.

### பயிற்சி

**1.** விடை எழுது:

1. திருக்குறளை இயற்றியவர் யார்?

2. திருக்குறளை ஏன் 'தமிழ்மறை' என்கிறோம்?

3. திருவள்ளுவர் ஒரு தலைசிறந்த அறிஞர் என்பதை எவ் வாறு அறிகிறோம்?

4. மற்ற நூல்களில் காணப்படாத தனிச் சிறப்பு திருக் குறளில் என்ன உள்ளது?

5. மேனுட்டறிஞர்கள் ஏன் திருக்குறளைச் சிறப்பிக்கின் றனர்?

**2.** கீழுள்ள சொற்களைத் தொடர்களில் அமைத்து எழுது:

ஒப்பற்ற, தலைசிறந்த, அரும்பெருஞ் செல்வம், பாராட்டி, திகழ்வது.

**3.** இன்னொரு, வேறொரு, மற்றொரு, பிறிதொரு—இந்நான்கு சொற்களுக்கும் பொருள் ஒன்றே. இவ்வாறு ஒரே பொரு ளில் வரும் சொற்கள் சிலவற்றைக் கூறு.

**4.** தமிழ் எழுத்துக்களை நான்கு வகையாகப் பிரித்துள்ளனர். அவை:

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ—இப்பன்னி ரண்டு எழுத்துக்களையும் **உயிர் எழுத்துக்கள்** என்று கூறுவர்.

க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்—இப் பதினெட்டு எழுத்துக்களுக்கும் மெய் எழுத்துக்கள் என்று பெயர்.

க முதல் னௌ வரை உள்ள 216 எழுத்துக்களுக்கும் உயிர் மெய் எழுத்துக்கள் என்று பெயர்.

ஃ—இதற்கு ஆய்த எழுத்து என்று பெயர்.

ஆகவே, தமிழ் எழுத்துக்கள் மொத்தம் 247. அவை உயிர் எழுத்து, மெய் யெழுத்து, உயிர்மெய் யெழுத்து, ஆய்த எழுத்து என நான்கு வகைப்படும்.

# 3. நூல் நிலையம்




நாம் புத்தகங்களைப் படிப்பது ஏன்? நமது அறிவை வளர்த்துக் கொள்வதற்காக அல்லவா? மணற்கேணியைத் தோண்டத் தோண்ட எவ்வாறு நீர் அதிகமாக ஊறுமோ அவ்வாறே நூல்களைக் கற்கக் கற்கத்தான் அறிவு வளர்ச்சியடையும். பரந்த அறிவினைப்பெற பலதிறப்பட்ட பொருள்களைப் பற்றியும் நாம் படித்தறிய வேண்டும். பாடப் புத்தகங்களை மட்டும் படிப்பதன் மூலம் நமக்குத் தேவையான எல்லாப் பொருள்களைப் பற்றியும் அறிந்துகொள்ள இயலுமா? இயலாது என்றே கூறலாம். ஏனெனில் பாடப் புத்தகங்களில் ஒரு சில கருத்துக்களே அடங்கியிருக்கும். எனவே, பாட நூல்கள் தவிரப் பிற நூல்கள் பலவும் படிக்கவேண்டிய தேவையேற்படுகிறது. அப்போதுதான் பல பொருள்களைப் பற்றியும், அறிஞர்களின் புதுப்புது ஆராய்ச்சிகளைப் பற்றியும் அறிந்து நமது பொது அறிவை வளர்த்துக்கொள்ள முடியும். ஆனால் அந் நூல்

களனைத்தையும் ஒவ்வொருவரும் விலைகொடுத்து வாங்கிப் படிக்க முடியுமா? முடியாதல்லவா? இக் குறையைத் தவிர்க்கவே நூல் நிலையங்கள் ஏற்பட்டுள்ளன.

நூல் நிலையத்தில் அறிவியல், அரசியல், கலை, இலக்கியம், கவிதை, கதை முதலிய பலவகைப்பட்ட புத்தகங்களும் இருக்கும். அவரவர் தத்தம் விருப்பத்திற்கும், தேவைக்கும் ஏற்ற நூல்களைத் தேர்ந்தெடுத்துப் படிக்கலாம். ஆங்காங்கு நூல் நிலையங்கள் நிறுவி மக்களுக்குப் பயன்படுமாறு செய்ய அரசினர் தற்போது அதிகக் கவனம் செலுத்தி வருகின்றனர்; ஒவ்வொரு மாவட்டத்திலும் பொது நூல் நிலையத்தை ஏற்படுத்தியுள்ளனர்; சிற்றூர்களில் கிளை நூல் நிலையங்களையும் நிறுவியுள்ளனர். சென்னையிலுள்ள கன்னிமரா நூல் நிலையமும், பல்கலைக் கழக நூல் நிலையமும் பெரியவை; பழமை வாய்ந்தவை.

சில இடங்களில் தற்காலத்தில் மோட்டார் வண்டிகளில் நூல் நிலையம் அமைத்துப் பல கிராமங்களுக்கும் வண்டிகளை ஓட்டிச் சென்று, புத்தகங்களை வழங்கவும் திரும்பி வாங்கவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இம் முறையைத் தஞ்சை மாவட்டக் கழகம் பின்பற்றி வருகிறது.

மாணவர்கள் தம் ஓய்வு நேரங்களில் பல்வேறு நூல்களைப் படித்துத் தம் பொது அறிவைப் பெருக்கிக் கொள்ளும் பொருட்டு, பள்ளிகளிலும் நூல் நிலையங்கள் உள்ளன. பள்ளி நூல் நிலையத்தைக் கண்காணிக்கும் பொறுப்பு ஆசிரியர் ஒருவரிடம் இருக்கும். அப்பொறுப்பாளர் நூல் நிலையத்திலுள்ள நூல்களனைத்தையும் கவனித்துக் கொள்வார்; புத்தகங்களின் பெயர்களைப் பட்டியல்களில் எழுதி வைப்பார்; மாணவர்களுக்குத் தேவையான புத்தகங்களைக் கொடுப்பதையும், வாங்குவதையும் குறித்து வைப்பார்.

மாணவர்கள்; நூல் நிலையத்தைப் பெரிதும் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். நூல் நிலையத்தில் அமர்ந்து படிக்கும்போது, மற்றவர்களுக்கு இடையூறு ஏற்படாமல்

பார்த்துக் கொள்ளவேண்டும். மௌனமாகப் படித்துக் கருத்துக்களை உணரும் ஆற்றலை வளர்த்துக்கொள்ள வேண்டும். புத்தகங்களை வாங்கும்போதும், அவற்றைத் திருப்பித் தரும்போதும் வரிசையில் சென்று ஒழுங்கு முறையைக் கடைப்பிடிக்க வேண்டும். நூல் நிலையத்தி லுள்ள புத்தகங்கள் பலரும் படிக்க வேண்டியவை ஆத லால் அவை கிழிந்து விடாமலும், அழுக்கடையாமலும் நாம் கவனித்துக் கொள்ளவேண்டும். புத்தகங்களில் கிறுக்குவதும், நமது சொந்தக் கருத்துக்களை எழுதிவைப் பதும் தவறான செயல்களாகும். புத்தகங்களைப் படிக்கும் போது அவற்றில் காணப்படும் அரிய கருத்துக்களை ஒரு தனிக் குறிப்புப் புத்தகத்தில் குறித்துவைத்தல் நலம். அவ்வாறு செய்யின் நமக்குத் தேவையானபோது அக் கருத்துக்களைப் பயன்படுத்திக் கொள்ள இயலும்.

## பயிற்சி

**1. விடை எழுது :**

1. பாட நூல்களைத் தவிரப் பிற நூல்களையும் ஏன் படிக்க வேண்டும் ?

2. நூல் நிலையங்கள் ஏன் ஏற்படுத்தப்படுகின்றன ?

3. சென்னையிலுள்ள பெரும் நூல் நிலையங்கள் யாவை ?

4. நூல் நிலையங்களில் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் ?

5. உனது பள்ளி நூல் நிலையத்தைப்பற்றி ஐந்து தொடர் கள் எழுது :

**2. கீழுள்ள சொற்களைத் தொடர்களில் அமைத்து எழுது :**

பலதிறப்பட்ட, தவிர்க்க, தேர்ந்தெடுத்து, பின்பற்றி, கண் காணிப்பு, இடையூறு.

**3. கீழ்க்காணும் குறைத் தொடர்களைத் தக்க சொற்களை எழுதி முடி :**

1. நாம் புத்தகங்களைப் படிப்பது...............

2. நாம் நம் விருப்பத்திற்கும் தேவைக்கும் ஏற்ற நூல் களை...............

3. மாணவர்கள் தங்களுக்கு ஓய்வு கிடைக்கும் போதெல்லாம்............—

4. நூல் நிலையத்தில் உட்கார்ந்து படிக்கும்போது......

5. நல்ல கருத்துக்களைக் குறிப்புப் புத்தகத்தில் குறித்து வைத்தால்......

**4.** பூ, காய், மரம், நால்வர், வந்தனர், வந்தார்கள்—இவை அனைத்தும் சொற்கள் எனப்படும்.

ஓர் எழுத்து தனியாகவேனும், இரண்டு முதலிய பல எழுத்துக்கள் சேர்ந்தேனும் ஒரு பொருளைத் தருமாயின், அதற்குச் சொல் என்று பெயர்.

சொற்கள் எத்தனை வகைப்படும்? அவை யாவை? சொற்கள் நான்கு வகைப்படும். அவை, பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச் சொல், உரிச் சொல் என்பனவாம்.

பெயர்ச்சொல்லையும், வினைச் சொல்லையும் நீங்கள் கீழ் வகுப்புக்களில் கற்றீர்கள். மற்ற இரண்டையும் பற்றி மேல் வகுப்புக்களில் கற்கலாம்.

இப்பாடத்திலிருந்து பத்து பெயர்ச் சொற்களையும், பத்து வினைச் சொற்களையும் எடுத்து எழுது.

# 4. ஆண்மையும், அன்பும்

ஆண்மை, அன்பு ஆகிய இவ்விரு பண்புகளையும் ஒன்றுக்கொன்று மாறுபட்டவை என்றே பலர் எண்ணுகின்றனர். அதனால் ஆண்மையுள்ளவர்களிடம் அன்பிருக்காதென்றும், அன்புள்ளவர்களிடம் ஆண்மை இருக்க முடியாது என்றும் கருதுகின்றனர். ஆதலால் ஆண்மையிற் சிறந்த வீரர்களை யெல்லாம் இரக்கமற்ற கொடியவர்களாக எண்ணுவதும், அன்பே உருவான சான்றோர் அனைவரையும் வீரமற்ற கோழைகளாக எண்ணுவதும் வழக்கமாகிவிட்டது. இக்கருத்துக்கள் சரியானவைதானா என்பதை இங்கு ஆராய்வோம்.

ஐரோப்பாக் கண்டத்தில் இங்கிலாந்து என்று ஒரு நாடு இருக்கிறது. முற்காலத்தில் அங்கு பிலிப் என்னும் வீரன் ஒருவன் இருந்தான். அவன் தன் அறிவினாலும், ஆண்மையினாலும் பெரும் புகழ் பெற்று விளங்கினான். ஆங்கிலப் படையில் இருந்த அனைவரும் பிலிப்பை நன்கு அறிவர். அவர்கள் அவனிடம் பெருமதிப்பு வைத்திருந்தனர். எல்லோருடைய நன்மதிப்பையும் பெற்ற பிலிப் ஆங்கிலப் படையின் ஒரு பிரிவுக்குத் தளபதியாக அமர்த்தப்பட்டான்.

அவன் படைத் தளபதியான சில நாட்களிலேயே அவனது படை கடல் கடந்து வெளி நாடுகளுக்குச் செல்ல நேர்ந்தது. இங்கிலாந்தின் எதிரிகள் பலரை அடக்க வேண்டிய பெரும் பொறுப்பு தளபதி பிலிப்பிடம் ஒப்படைக்கப்பட்டது. தனது பொறுப்பை உவகையோடும், பெருமிதத்தோடும் ஏற்றுக்கொண்ட தளபதி பிலிப் தன் படை வீரர்களுடன் வெளிநாடுகளுக்குப் புறப்பட்டான்.

அவன் சென்ற நாடுகளனைத்தும் அவனுக்கு முற்றிலும் புதியவை. அந்நாடுகளின் தட்ப வெப்ப நிலைகள் அவனுக்கும், அவனுடன் சென்றிருந்த வீரர்களுக்கும் ஏற்றதாயில்லை. அவர்களுக்குத் தேவையான உணவு முதலியவைகளும் உரிய காலத்தில் கிடைக்கவில்லை.

இடம்விட்டு இடம் மாறுவதும் அக்காலத்தில் எளிதன்று. ஆங்காங்கு வாழ்ந்திருந்த மக்களும் அவர்களுக்கு உதவ முன்வரவில்லை.

ஒரு சிறந்த வீரன் இவற்றையெல்லாம் ஒரு பொருட்டாக மதிக்கமாட்டான். இத்தகைய இடையூறுகளைக் கடந்து பெறும் வெற்றிதான் சிறந்த வெற்றியாகும். ஆகவே தளபதி பிலிப் இவை அனைத்தையும் பொறுத்துக் கொண்டு போராடினன். அவன் ஈடுபட்ட போர்கள் அனைத்திலும் அவனுக்கு வெற்றியே கிட்டியது. ஒரு போரில் தளபதி பிலிப் தனது முழுத் திறமையையும் ஈடுபடுத்த வேண்டியிருந்தது. அப் போரோடு ஒப்பிட்டுப் பார்க்கையில் அதுவரை அவன் நிகழ்த்திய போர்கள் அனைத்தும் அவனுக்குப் போர்களாகவே புலப்படவில்லை. ஆகவே அதனை ஒரு சோதனைப் போராகவே அவன் கருதினன்.

தளபதி பிலிப்பின் படை சூரைக் காற்றுபோல் சுழன்று சுழன்று எதிர்ப்படையைத் தாக்கிற்று. எதிரிகள் சுருண்டு சுருண்டு வீழ்ந்தனர். தளபதி பிலிப் குதிரை ஒன்றின்மேல் அமர்ந்தபடி தன் படையின் முன்னணியில் இருந்து போரிட்டுக் கொண்டிருந்தான். கட்டி முடிக்கப்படும் நிலையிலிருந்த ஒரு பெரிய அணையில் எதிர்பாராத வண்ணம் வெடிப்பு ஏற்பட்டதைப்போல் அங்கு ஒரு நிகழ்ச்சி ஏற்பட்டது. போரின் வெற்றி தோல்விகளை முடிவுகட்டும் நேரத்தில் எதிரியின் குண்டு ஒன்று தளபதியின் தொடையைக் கிழித்துக்கொண்டு சென்றது. கிழிக்கப்பட்ட தொடையிலிருந்து குருதி அருவிபோல் பாய்ந்து கொண்டிருந்தது. தனது உள்ளம் சளைக்காவிடினும், உடலில் சோர்வு ஏற்படுவதை அவன் உணர்ந்தான். எனவே சற்றுப் பின்சென்று புண்ணைப் பார்த்துச் சரிப்படுத்திக்கொண்டு திரும்ப நினைத்த அவன் தனது குதிரையைப் பின்பக்கமாகச் செலுத்தினன். அதையறிந்த வீரர் இருவர் அவனுக்குத் துணையாகச் சென்றனர்.

சிறிது தொலைவிற்கப்பால் இருந்த அமைதியான

இடத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்த தளபதிக்குப் புண்ணில் ஏற்பட்ட நோய் பொறுக்க முடியாததாயிற்று. உடலும் காய்ந்து கொண்டிருந்தது. வெயிலின் கடுமையும் தாங்க முடியாததாயிருந்தது. இக்காரணங்களால் அவனது நாவும் வறண்டுவிட்டது. மெதுவாகக் குதிரையிலிருந்து இறங்கிய தளபதி ஒரு மரநிழலில் அமர்ந்தான். உடனே தனக்குக் குடிநீர் கொண்டு வரும்படி வீரர்களுக்குக் கட்டளையிட்டான். அவர்களும் அரிதின் முயன்று ஒரு சிறு கோப்பையில் தண்ணீர் கொண்டுவந்து தமது தளபதியிடம் தந்தனர். அதைக் கையில் வாங்கிய தளபதி குடிப்பதற்காக வாயருகில் கொண்டு போனான். அந் நிலையில் தன் அருகில் வீரன் ஒருவன் சாவோடு மன்றாடிக் கொண்டிருப்பதை அவன் கண்டான்.

அவ்வீரன் எதிரியின் படையைச் சேர்ந்தவன். அவன் அன்றைய போரில் பெரும் தாக்குதலுக்குள்ளாகியதால் மெல்ல மெல்ல உயிரை விட்டுக்கொண்டிருந்தான். அவ்வீரன் தனது ஆவல் நிறைந்த கண்களால் தளபதியின் கையிலிருந்த கோப்பையைப் பார்த்தான். அக் குறிப்பை உணர்ந்த தளபதி பிலிப்பின் ஆண்மை மிக்க உள்ளத்தில் அன்பு சுரந்தது. தான் குடிக்கத் தொடங்கிய நீரைத் தன் வீரர்களின் மூலமாக அவ்வெதிரிக்குக் கொடுத்தனுப்பினான். அந்நீரைப் பருகியதால் அவ்வீரனின் ஆவி அமைதியாக அவன் உடலைவிட்டுப் பிரிந்தது.

இந்நிகழ்ச்சியிலிருந்து பிலிப்பைப் போன்றவர்களின் ஆண்மை செறிந்த உள்ளங்களில் அன்புக்கும் இடம் உண்டு என்பதை நாம் தெரிந்து கொள்ளலாம். அவ்வாறே அன்பு ததும்பும் சான்றோர்களின் உள்ளங்களில் ஆண்மையும் இடம்பெறும் என்பதையும் நாம் நம்பலாம். திருவள்ளுவர் ஆண்மையாளரிடம் காணப்படும் இவ்வன்பைத்தான் ஆண்மையின் கூர்மை என்கிறார். வாழ்க ஆண்மை! வளர்க அதன் கூர்மை.

## பயிற்சி

**1. விடை எழுது :**

1. ஆண்மையும், அன்பும் பற்றிய கருத்துக்கள் யாவை?

2. தளபதி பிலிப்பிடம் ஒப்படைக்கப்பட்ட பொறுப்பு யாது?

3. தளபதி பிலிப் வெளிநாடுகளில் அடைந்த இடையூறுகள் யாவை?

4. போர் செய்துகொண்டிருந்த தளபதி பிலிப் பின் சென்றது ஏன்?

5. ஆண்மையாளரின் உள்ளத்தில் அன்புக்கும் இடம் உண்டு என்பது எவ்வாறு தெரிகிறது?

**2. கீழுள்ள சொற்களை உன் சொந்தத் தொடர்களில் அமைத்து எழுது :**

ஒன்றேடொன்று, ஆராய்வோம், அமர்த்தப்பட்டான், உவகையோடும் பெருமிதத்தோடும், தட்ப வெப்ப நிலை, ஆங்காங்கு, சூரைக்காற்றுபோல் சுழன்று சுழன்று, அருவி போல், அரிதின் முயன்று, மன்ருடிக்கொண்டு.

# 5. சேரிடம் அறிந்து சேர்



ஒரு காட்டில் ஒரு சிங்கம் இருந்தது. அது நரி, புலி, காகம் ஆகிய மூன்றையும் தனக்கு மந்திரிகளாக வைத்துக்கொண்டு அரசாட்சி செய்து வந்தது. ஒரு நாள் ஒட்டகம் ஒன்று வழி தவறி அக்காட்டிற்கு வந்துவிட்டது. அதைக் கண்ட காக்கை, "நீ யார்?" என்று கேட்டது. ஒட்டகம், "நான் வழி தவறி இங்கு வந்துவிட்டேன்" என்றது. பிறகு காக்கை ஒட்டகத்தைத் தன்னுடன் அழைத்துச் சென்று, தன்னுடைய அரசனுகிய சிங்கத்தினிடம் அதைப்பற்றிச் சொல்லிற்று. அதைக் கேட்ட சிங்க அரசன், "சரி மிக்க மகிழ்ச்சி. இன்று முதல் நீயும் என் மந்திரியாக இரு" என்று கூறி ஒட்டகத்தையும் தன்னுடன் சேர்த்துக்கொண்டது.

சிறிது காலத்திற்குப் பிறகு ஒரு நாள் சிங்கத்தின் உடல் நலம் கெட்டுவிட்டது. அதனுல் இரை தேடப் போக முடியவில்லை. ஆனுல் பசி குடலைப் பிடுங்குவது

போல் இருந்தது. எனவே, அது தன்னுடைய நான்கு மந்திரிகளையும் அழைத்து, "மந்திரிகளே! எனக்கு இன்று உடல் நலம் குன்றியிருக்கிறது. என்னால் இரை தேட முடியவில்லை. நீங்கள் நால்வரும் சென்று, இரை தேடி வாருங்கள். நான் உண்டதுபோக எஞ்சியதை நீங்களும் உண்ணலாம்" என்றது. அதைக் கேட்ட நான்கு மந்திரிகளும் இரை தேடப் புறப்பட்டன.

அவை காடு முழுவதும் அலைந்தன. இரை எதுவும் அகப்படவில்லை. இரை இல்லாமல் சென்றால் சிங்கம் தங்களையே அடித்துத் தின்று விடுமே என்று அவை அஞ்சின. என்ன செய்வதென்று தெரியாமல் விழித்தன. கடைசியில் ஒட்டகத்தை வேறு வேலையாகத் தொலைவில் அனுப்பிவிட்டு நரி, புலி, காகம் ஆகிய மூன்றும் சேர்ந்து சூழ்ச்சியாகத் திட்டமிட்டன.

அப்போது காகம், "ஒட்டகத்தைக் கொன்று நம் அரசனுக்குக் கொடுத்து விடலாம். அவன் நம்மைப் போல இறைச்சி உண்பவனல்லவே; தழையும், புல்லும் தின்பவனல்லவா? அவனால் நமக்கு என்ன பயன்" என்றது.

அதைக் கேட்ட புலி, "நமது அரசன் ஒட்டகத்தை ஆதரிப்பதால் நாம் அவனைக் கொல்வது தவறாகும்" என்றது.

பிறகு நரி "இதற்கெல்லாம் நான் ஒரு வழி செய்கிறேன்" என்று கூறித் தனியே சிங்கத்தினிடம் சென்றது.

நரி சிங்கத்தைப் பார்த்து "அரசே! எங்குதேடியும் இரை அகப்படவில்லை. வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அலைவதுபோல, இரையை வைத்துக் கொண்டு வீணாக இவ்வளவு நேரம் காட்டில் அலைந்து விட்டோம். நம்முடன் இருக்கும் ஒட்டகத்தை நாம் மறந்தே போய்விட்டோம்" என்று சொல்லிக்கொண்டிருக்கையில் சிங்கம் "சிவ சிவா! அடைக்கலமாக ஏற்றுக்கொண்டவனைக் கொலை செய்யலாமா?" என்றது.

அதைக் கேட்ட நரி "தாங்கள் கொல்லவேண்டாம்.

ஒட்டகமே தன்னைக் கொன்று தின்னுங்கள் என்று கூறும். அப்போது அதனை நாங்கள் அடித்துக் கொன்று தங்களுக்குத் தருகிறோம்'' என்றது. அதற்குச் சிங்கம் ஒன்றும் பதில் சொல்லாமல் இருந்துவிட்டது.

உடனே நரி, காகத்தையும், புலியையும் சந்தித்து இரகசியமாகப் பேசி, ஏதோ ஒரு திட்டமிட்டுக் கொண்டது. பின்னர் அவை மூன்றும் ஒட்டகத்தையும் அழைத்துக் கொண்டு சிங்கத்தினிடம் சென்றன. சென்றவுடன் காக்கை சிங்கத்தைப் பார்த்து, ''அரசே! இன்று தங்களுக்கு இரை ஒன்றும் கிடைக்கவில்லை. ஆனாலும் தாங்கள் பசியுடன் இருத்தலாகாது. என்னை உண்டு பசி தணியுங்கள்'' என்றது. ''சீ! நீ எம்மாத்திரம். என் கடைவாய்க்குக் கூட போதமாட்டாய். உன்னைத் தின்றால் என் பசி தணியுமா?'' என்று சிங்கம் சினத்துடன் கூறியது.

பிறகு நரி ''ஐயனே! என்னையாவது உண்டு பசியாறலாகாதா?'' என்று பணிவுடன் உரைத்தது. ''உன்னைத் தின்றாலும் என் பசி தீராது'' என்று சிங்கம் பதில் கூறிவிட்டது.

அடுத்த படியாகப் புலி ''நான் அவர்களைவிடப் பெரியவன். எனவே, என்னையாவது தின்றருள வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டது. ''நீ மட்டும் மிகவும் பெரியவன் என்பது உன் எண்ணமோ!'' என்றுரைத்து அதனையும் மறுத்துவிட்டது சிங்கம்.

இறுதியாக ஒட்டகம், ''அரசர் பெருமானே! நான் அவர்கள் எல்லோரினும் பெரியவன். ஆதலால் தாங்கள் என்னை உண்டால் தங்கள் பசி தீருவது உறுதி'' என்றது. உடனே புலி ஒட்டகத்தின்மேல் பாய்ந்து அதனை அடித்துக் கொன்றது. இறந்த ஒட்டகத்தைச் சிங்கம் தின்று களித்தது. எஞ்சியதை மற்ற மூன்று மந்திரிகளும் உண்டு மகிழ்ந்தன.

ஒட்டகம் சேரத் தகாத இடத்தில் சேர்ந்தது. அதனால் தாங்க முடியாத துன்பத்தை அடைந்து மாண்டது.

## பயிற்சி

**1. விடை எழுது :**

1. சிங்கத்தின் மந்திரிகள் யாவை? ஒட்டகம் ஏன் அவற்றுடன் சேர்ந்தது ?

2. ஒட்டகத்தைக் கொல்ல மற்ற மூன்று மந்திரிகளும் ஏன் சூழ்ச்சி செய்தன ?

3. சிங்கம் முதலில் ஏன் ஒட்டகத்தைக் கொல்ல மறுத்தது ?

4. காகம், நரி, புலி ஆகியவற்றைச் சிங்கம் ஏன் கொன்று தின்ன மறுத்தது ?

5. ஒட்டகம் செய்த தவறு என்ன ? அதன் முடிவு என்ன ?

**2. எதிர்ச்சொற்கள் எழுது :**

தவறி, மகிழ்ச்சி, சேர்த்துக்கொண்டது, சென்று, தவறும்.

**3. பிரித்து எழுது :**

சொல்லிக்கொண்டிருக்கையில், திட்டமிட்டது, இரையொன்றும், இருத்தலாகாது, தின்றருளவேண்டும்.

**4. கீழுள்ள சொற்களைக் கவனி :**

மலை, ஊர், இரவு, வாய், நன்மை, நடத்தல்—இவை ஆறும் பெயர்ச் சொற்கள்தான். எனினும் இவைகளுக்கிடையில் உள்ள வேறுபாடுகளைக் கவனி.

மலை—இது ஒரு பொருளின் பெயர்.

ஊர்—இது ஓர் இடத்தின் பெயர்.

இரவு—இது ஒரு காலத்தின் பெயர்.

வாய்—இது ஒரு சினையின் (உறுப்பின்) பெயர்.

நன்மை—இது ஒரு குணத்தின் பெயர்.

நடத்தல்—இது ஒரு தொழிலின் பெயர்.

இவற்றை முறையே பொருட் பெயர், இடப் பெயர், காலப் பெயர், சினைப் பெயர், குணப் பெயர், தொழிற் பெயர் என்று கூறலாம்.

**கீழுள்ளவற்றில் பொருத்தமற்றவைகளை அடித்துவிடு :**

1. பொருட் பெயர் : மரம், மக்கள், பகல், கை, பெண்.
2. இடப் பெயர் : பள்ளிக்கூடம், உண்ணுதல், நாடு, தலை, கிராமம்.
3. காலப் பெயர் : நாள், மாதம், வண்டி, சித்திரை, நாழி.
4. சினைப் பெயர் : விரல், இலை, மாலை, கிளை, வால்.
5. குணப் பெயர் : கருமை, வெண்மை, காகம், தீமை, பல், வருதல்.
6. தொழிற் பெயர் : ஓடுதல், எழுதுதல், உண்டான், கழுத்து, மாவட்டம்.

# 6. நிலக்கரி

இயற்கையன்னை மக்களுக்கு வழங்கும் முக்கியமான பொருள்களில் நானும் ஒருவன். நானும் என் நண்பன் இரும்பும் சேர்ந்து இந்த உலகத்தையே தொழில் உலக மாக மாற்றிவிட்டோம் என்ருல் எங்கள் பெருமையை உங்களால் அளவிட்டுக் கூறமுடியுமா? எங்கு பார்த்தாலும் தொழிற்சாலைகள் காணப்படுகின்றன. அவையனைத்தும் எங்கள் உதவியினுலேயே இயங்குகின்றன. நீராவி இயந்திரங்களை இயக்குவதற்கு என் உதவியைத்தான் எதிர்பார்க்க வேண்டும். இவ்வளவு சிறப்புக்களும் உடைய என் பெயர் நிலக்கரி.

என்னைப் பூமியின் அடியிலிருந்து வெட்டி எடுக்கிருர்கள். சில இடங்களில் பூமியின் அடியில் நான் தொடர்ந்தாற் போல் இருப்பேன். அவ்விடங்களை நிலக்கரிப் படுகைகள் என்று கூறுவர். அங்கு சுரங்கங்கள் வெட்டி என்னை எடுக்கிருர்கள்.

ஆயிரக் கணக்கான ஆண்டுகட்கு முன் ஏற்பட்ட நில நடுக்கத்தால் பூமியில் பெரும் பிளவுகள் ஏற்பட்டு அவற்றில் மரங்களடர்ந்த காடுகள் புதைந்து விட்டனவென்றும், மண்ணின் அழுத்தத்தினுல் அம்மரங்கள் நாளடைவில் உருமாறி நாங்கள் தோன்றியிருக்கக் கூடுமென்றும் அறிஞர்கள் கருதுகின்றனர்.

எங்கள் இனத்தில் இரு வகையுண்டு. ஒரு பிரிவினர் எரிந்தால் மிகுந்த புகையைத்தான் உண்டாக்குவார்கள். மற்ருெரு பிரிவினர் எரிந்தால் மிகுந்த அனலை உண்டாக்குவார்கள்; இரண்டாம் வகையைச் சேர்ந்த எங்கள் இனத்தாரைத்தான் புகைவண்டியில் உள்ளது போன்ற நீராவி இயந்திரங்களில் பயன்படுத்துகிருர்கள். ஏனெனில் அவர்களால் தான் அதிக வெப்பத்தைத் தர இயலும்.

எங்களிடமிருந்து தார், பினைல் போன்ற பொருள்கள் தயாரிக்கப்படுகின்றன. இரும்பைக் காய்ச்சி உருக்கவும் நாங்கள் பயன்படுகிருேம். சாயங்கள் கூட எங்கள் மூலம் இறக்கப்படுகின்றன. விளக்குகள் சில எங்கள்

உதவியால் எரிகின்றன. நாங்கள் உலகத்திற்கு எவ்வளவு பயன்படுகிறோம் என்பதை இப்போது உணர்கிறீர்களா? இதனாலேயே நாங்கள் எந்த நாட்டில் அதிகமாகக் கிடைக்கிறோமோ அந்நாட்டினைச் ‘செல்வ நாடு’ என்று கூறுகின்றனர்.

நாங்கள் அமெரிக்காவில் அதிகமாகக் கிடைக்கிறோம். இந்தியாவில் தாமோதர் நதிப் பள்ளத்தாக்கில் அதிகமாகக் காணப்படுகிறோம். அங்கு எங்களை எடுக்கப் பெரிய பெரிய சுரங்கங்கள் உள்ளன. ஐதராபாத்தில் கூட எங்களுக்கென்று சுரங்கம் ஒன்று இருக்கிறது. தென்னிந்தியாவில் தென்னார்க்காடு மாவட்டத்தில் நெய்வேலி என்னுமிடத்திலும் எங்கள் இனத்தவர் இருப்பதைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். இங்கு காணப்படும் வகையினர் சற்றுப் பழுப்பு நிறமாய் இருக்கிறார்கள். ஆகவே இவ்வகையினரைப் ‘பழுப்பு நிலக்கரி’ என்று அழைக்கிறார்கள். நெய்வேலியில் நிலக்கரி நூறுசதுர மைலுக்குப் பரந்து கிடக்கிறது. தமிழ் நாட்டிற்கு ஏறத்தாழ நாநூறு ஆண்டுகளுக்குத் தேவையான அளவு எங்கள் இனத்தவர் நெய்வேலியில் இருப்பதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள். இது தமிழ் நாட்டிற்கே பெருஞ் செல்வம் போன்றதல்லவா? எங்களை நன்கு பயன்படுத்திக் கொண்டால் தமிழ் நாடு தொழில் துறையில் சிறந்து விளங்கும் என்பதில் ஐயமுண்டோ?

## பயிற்சி

**1. விடை எழுது:**

1. நிலக்கரிப் படுகைகள் என்றால் என்ன?
2. நிலக்கரி எவ்வாறு தோன்றுகிறது?
3. இருவகை நிலக்கரிகள் யாவை? நீராவி இயந்திரங்களுக்குப் பயன்படும் வகை எது?
4. செல்வ நாடு என்று எதனைக் கூறுகின்றனர்? ஏன்?
5. நெய்வேலிச் சுரங்கத்தில் எவ்வகை நிலக்கரி கிடைக்கும்?
6. நிலக்கரி நமக்கு எந்தெந்த வகைகளில் பயன்படும்?

**2. கீழுள்ள சொற்களைத் தொடர்களில் அமைத்து எழுது :**

அளவிட்டுக் கூற, இயங்குகின்றன, சிறப்புக்கள், பயன் படுத்தும், ஏறத்தாழ.

**3. சேர்த்து எழுது :**

இயற்கை + அன்னை பூமியின் + அடியில்
மரங்கள் + அடர்ந்த சுரங்கங்கள் + உள்ளன
ஒன்று + இருக்கிறது என்பதில் + ஐயமுண்டோ

**4. எதிர்ச் சொற்கள் எழுது :**

வழங்கும், பெருமை, தொடர்ந்து, பெரும், மாறி, வெப்பம், செல்வ நாடு, பரந்து.

**5. கீழே இரு பிரிவுகளாக உள்ள வினைச் சொற்களைக் கவனி:**

அவைகளுள் காணப்படும் வேறுபாட்டையும் அறிந்து கொள்.

| (1) | (2) |
| --- | --- |
| படித்தேன் | படிப்பித்தேன் |
| அடித்தேன் | அடிப்பித்தேன் |
| வந்தான் | வருவித்தான் |
| ஓடினாய் | ஓட்டினாய் |

முதற்பிரிவில் உள்ளவை, ஒருவர் தாமே செய்யும் வினைகள். இரண்டாம் பிரிவில் உள்ளவை, ஒருவர் பிறரைக் கொண்டு செய் விக்கும் வினைகள். ஆகவே, இவற்றை முறையே **தன்வினை** என்றும், **பிறவினை** என்றும் கூறலாம்.

ஒருவர் தாமே செய்வது **தன்வினை. பிறரைக்கொண்டு செய்விப்பது பிறவினை.**

# 7. மழை

"மாரி அல்லது காரியமில்லை" என்னும் பழமொழியை நீங்கள் படித்திருக்கிறீர்களா? இதன் கருத்து என்ன? மழையில்லையெனில் இவ்வுலகில் எக்காரியமும் நடைபெற இயலாது. ஏனென்றால் மழை பெய்யாவிட்டால் புல் பூண்டுகள்கூட இருக்கமாட்டா. அதனால் நமக்குத் தேவையான உணவு கிடைக்காமற் போய்விடும். ஆறு, ஏரி, கிணறு முதலிய நீர்நிலைகளும் வறண்டு, குடி நீரும் இல்லாமற் போகும். உண்ண உணவும், குடிக்க நீரும் இல்லாமல் உலகில் உயிர் வாழ்தல் இயலாதல்லவா?

ஒரு நாட்டின் சிறப்பினைக் கூறும்போது அதனுடைய நீர் வளத்தையும், நில வளத்தையும் குறிப்பிடுவது வழக்கம். நீர்வளம் இன்றி நிலவளம் எங்ஙனம் ஏற்படும்? நீர்வளத்திற்கு இன்றியமையாதது மழைதான். இத்தகைய சிறப்பு வாய்ந்த மழை எவ்வாறு பெய்கிறது என்று கவனிப்போம்.

உங்கள் வீட்டில் அடுப்பில் நீரைக் காய்ச்சும்போது மேலே ஆவி செல்வதைக் கவனித்திருக்கிறீர்களா? இந்த ஆவிக்கு 'நீராவி' என்று பெயர். இந்த ஆவியைத் தடுப்பது போல் ஒரு பலகையைப் பிடித்தால், அந்தக் குளிர்ந்த பலகையின் மேல் நீராவி பட்டதும் அது நீர்த் துளிகளாக மாறுவதைக் காணலாம். கொதிக்கும் சோற்றின்மேல் மூடப்பட்டுள்ள தட்டை நீக்கியதும், தட்டில் நீர்த்துளிகள் காணப்படுகின்றனவல்லவா? இதற்கும். அதே காரணம்தான். எனவே, நீராவி குளிர்ந்த பொருளின்மீது படும்போது, நீராக மாறுகிறது என்று அறிகிறோம்.

கடல், ஆறு, ஏரி போன்ற நீர் நிலைகளிலுள்ள நீர் சூரிய வெப்பத்தினால் ஆவியாக மாறுகிறது. இந்த ஆவி மேலே செல்லும் இயல்பு உடையது. இது மேலே சென்று ஒன்று திரண்டு இருப்பதைத்தான் நாம் 'மேகம்' என்று கூறுகிறோம். மேகத்தின்மேல் குளிர்ந்த காற்று பட்டவுடன் அது மீண்டும் நீராக மாறி மழையாகப் பொழி

கிறது. மரங்களடர்ந்த பெருங்காடுகள் உள்ள இடங்களில் காற்று குளிர்ச்சியாய் இருக்குமாதலால் அங்கு மழையும் அதிகம் என்பதை முன் வகுப்பிலேயே நீங்கள் படித்திருக்கிறீர்கள்.

மழை உண்பவர்களுக்கு வேண்டிய பொருள்களை விளைவித்துத் தருவதோடு, தானும் குடிநீராக அமைகிறது. தக்க சமயத்தில் பெய்யாமல் ஒருவரது வாழ்வைக் கெடுக்கவல்லது மழை; மழையில்லாமல் வளம்கெட்டு வாடுபவருக்குத் துணையாய்ப் பெய்து, அவர்களைக் கை தூக்கிக் காக்க வல்லதும் மழை. எனவே, இதற்கு அழிக்கும் திறனும், ஆக்குந் திறனும் உண்டு. ஆனால், இக்காலத்தில் அடிக்கடி மழை பொய்த்துவிடுகிறது. அதன் காரணமாக உணவுப் பொருள் உற்பத்தி மட்டுப்படுகிறது. உணவுப் பற்றுக்குறை ஏற்படுகிறது. இதனாற்றான் அரசினர் ஆறுகளில் ஆங்காங்கு நீர்த் தேக்கங்களைக் கட்டி நீரை வீணாக்காமல் பயன் படுத்த முயற்சிகள் எடுத்துள்ளனர். அத்துடன் செயற்கை முறையில் மேகத்தைத் திரட்டி, அதனைக் குளிரச் செய்து, மழை பொழியச் செய்யும் முறையினையும் கண்டு பிடித்துள்ளனர். இது விஞ்ஞான வளர்ச்சி நமக்குத் தந்துள்ள பயனாகும். இனி, வான் பொய்க்காமல் செய்து நாட்டினைச் செழிக்கச் செய்ய இயலுமென நம்பலாம்.

## பயிற்சி

**1. விடை எழுது :**

1. ஒரு நாட்டின் வளத்திற்கு மழை எவ்வாறு இன்றியமையாத தாகிறது ?

2. நீராவியின் தன்மைகள் யாவை ?

3. மழை எவ்வாறு பெய்கிறது ?

4. மழையின் சிறப்புக்களைக் கூறு.

5. மழை பொய்க்காதிருக்க அரசினர் மேற்கொண்டுள்ள முயற்சிகள் யாவை ?

**2.** கீழுள்ள சொற்களைத் தொடர்களில் அமைத்து எழுது:
ஒன்றுதிரண்டு, வளம்கெட்டு, மட்டுப் படுகிறது, பற்றுக் குறை, வீணாக்காமல்.

**3.** தடித்த எழுத்திலுள்ள சொற்களை எடுத்துவிட்டுப் பொருத்தமான வேறு சொற்களை எழுது:

1. ஒரு நாட்டின் **வளத்திற்கு** மழை **இன்றியமையாதது.**
2. **நீர்நிலைகள்** வறண்டு போகும்.
3. மழை **எவ்வாறு** பெய்கிறது?
4. நீர் **சூரியனின் வெப்பத்தினால்** ஆவியாக மாறும்.
5. **அழிக்கும் திறனும் உள்ளது** என்னலாம்.

**4.** கீழ்க் காணும் சொற்களில் உள்ள தன்வினைகளையும், பிறவினைகளையும் தனித்தனியாகப் பிரித்து எழுது:
உருள்கிறது, உருட்டுகிறது, மேய்கிறது, கட்டுவித்தான், உண்பித்தாள், பாய்கிறது, நக்குகிறது, கிழித்தேன், அடிப்பித்தேன், அழுதான்.

# 8. பருவத்தே பயிர் செய்

''பருவத்தே பயிர் செய்'' என்ற பழமொழியை நீங்கள் அறிந்திருப்பீர்கள். பயிரிடுவதற்கு ஏற்ற பருவத்தில் பயிரிடவேண்டும் என்பது அப்பழமொழியின் கருத்தாகும். தகுந்த பருவத்திற்கு முன்னும் பயிர் செய்யக்கூடாது; பின்னும் பயிர் செய்யக்கூடாது. உரிய காலத்தில் பயிரிட்டால்தான் மழை, சூரிய வெப்பம் முதலியவை வேண்டியபோது வேண்டிய அளவு கிடைத்து, பயிர் செழித்து வளர்ந்து, பயனையும் மிகுதியாகத் தரும். காலந் தவறிப் பயிரிட்டால், நாம் என்ன பாடுபட்டாலும் பயன் கிடைக்காது ; மழை அதிகமாகப் பெய்வதாலோ, மழையே பெய்யாமல் காய்வதாலோ பயிர்கள் அழிந்து போகும். ஆகவே, பயிர் செய்வதில் காலந் தவறக் கூடாது என்பது இப்பழமொழியிலிருந்து தெரிகிறது. ''ஆடிப் பட்டம் தேடி விதை'', ''காலத்துப் பயிர் கரம்பிலே'' என்ற பழமொழிகளும் இதே கருத்தை விளக்குவனவே.

காலந் தவறாமை பயிர்த் தொழிலுக்கு மட்டும் வேண்டிய ஒன்றல்ல. எல்லாவற்றிலுமே காலந் தவறக் கூடாது. பள்ளிக்குச் செல்வதும், விளையாடுவதும், வேலை செய்வதும், உண்பதும், உறங்குவதும் ஆகிய எல்லாவற்றிற்குமே காலந் தவறாமை இன்றியமையாததாகும். கல்வி கற்பதற்குரிய பருவம் இளமைப்பருவமே. எனவே, அப்பருவத்தில் கல்வி கற்கத் தவறலாகாது. இளமையிற் கற்கா விட்டால் பிறகு கற்பது மிகவும் அரிது. அதனால்தான் ''இளமையிற் கல்'' என்னும் பொன்மொழியும் எழுந்தது.

போருக்குச் செல்லும் அரசனும் தக்க காலத்தை அறிந்தே செல்லவேண்டும். ஓர் அரசன் எவ்வளவு வலியவனாயினும், அவனிடம் மிகுதியாகப் படைகள் இருந்தாலும், அவனது எதிரி எவ்வளவு வலிவற்றவனாயினும், அவன் மிகவும் குறைந்த படைகளை உடையவனாயினும், காலமற்ற காலத்தில் போருக்குச் செல்லக் கூடாது பொருத்தமான காலத்தில் சென்றால் ஆற்றல் குறைந்த

வனும் ஆற்றல் மிக்க ஒருவனைப் போரில் எளிதாக வெல்ல முடியும்.

மேலுள்ள கருத்தைத் திருவள்ளுவர் மிகமிக அழகாகக் கூறியிருக்கிறார். பறவைகளில் மிக்க வலிமையும், உறுதியும் உடையது கோட்டான். கூட்டமாகச் சேர்ந்து கத்தினாலும் காகம் வலிமை குறைந்த பறவையேயாகும். கோட்டானுக்கு இரவில்தான் கண் தெரியும்; பகலில் தெரியாது. அதனாற்றான் அது பகலில் மரப்பொந்துகளில் பதுங்கியிருந்து இரவில் இரைதேடப் புறப்படுகின்றது. எனவே, கோட்டானுக்கு ஏற்ற காலம் இரவுக் காலமாகும். அதேபோல் காகத்திற்கு ஏற்றகாலம் பகற்பொழுதாகும். அதற்கு இரவில் கண் தெரியாது; பகலில் தான் நன்றாய்த் தெரியும். "காகம் தனக்குப் பொருத்தமான காலமாகிய பகற்காலத்தில் சண்டைக்குச் சென்றால் தன்னிலும் மிக்க வலிமையுடைய கோட்டானையும் வெல்ல முடியும்" என்கிறார் தமிழ்மறை யருளிய நம் வள்ளுவர்.

ஆகவே, இளம் மாணவர்களாகிய நீங்கள் எச்செயலையும் அதற்குரிய காலத்திலேயே தாமதமாகாமல் செய்யப் பழகுங்கள். "தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்" அல்லவா?

## பயிற்சி

**1.** விடை எழுது:

1. 'பருவத்தே பயிர் செய்' என்பதன் கருத்து யாது?
2. பருவம் தவறிப் பயிரிட்டால் என்ன ஆகும்? ஏன்?
3. கல்வி கற்பதற்குரிய பருவம் எது? ஏன்?
4. போருக்குச் செல்லும் அரசர் கவனிக்கவேண்டியது யாது?
5. போருக்குச் செல்லும் அரசரைப் பற்றித் திருவள்ளுவர் கூறுவதை விளக்கி எழுது.

**2.** கீழுள்ள குறைத் தொடர்களைத் தக்க சொற்களை எழுதி முடி:

1. உரிய காலத்தில் பயிரிடாவிட்டால்............
2. அரசன் காலமல்லாத காலத்தில் போருக்குச் சென்றால்............

3. காகம் இரவில் கோட்டானிடம் சண்டைக்குச் சென்ருல் ................

4. நாம் இளமையில் கற்காவிட்டால்...............

5. ‘தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்’ என்ருல்............

**3.** இது என் வீடு

நான் பள்ளிக்குச் செல்கிறேன்.

மேற் காணுபவை தொடர்கள் எனப்படும். அவைகளேச் சொற்ருெடர் என்றும், வாக்கியம் என்றும் கூறுவதுண்டு.

எழுத்துக்களால் ஆனது சொல்லாதல் போல, சொற் களாலானது தொடர் எனப்படும்.

ஒவ்வொரு தொடரிலும் பொருள் முற்றுப் பெற்றிருக்க வேண்டும். பொருள் முற்றுப் பெற்றிருப்பதை முற்றுத் தொடர் என்றும், பொருள் முற்றுப் பெருமல் அரை குறையாக உள்ளதை எச்சத் தொடர் என்றும் கூறுவது வழக்கம். முற்றுத் தொட ரைத் தொடர் என்றே கூறலாம். உங்கள் பயிற்சிகளில் பல இடங்களில் எச்சத் (குறைத்) தொடர்களேக் கொடுத்து அவை களே முற்றுத் தொடர்களாக ஆக்கச் சொல்லி யிருப்பதைப் பாருங்கள்.

**4.** கீழுள்ள தொடர்களில் எது முற்றுத் தொடர், எது எச்சத் தொடர் என்று கூறு.

1. அவன் கடைக்குச் செல்கிருன்.
2. நான் நேற்று பள்ளிக்கூடம்.
3. யாருக்கு வேண்டுமானுலும்.
4. யாரும் எனக்கு உதவி செய்ய வேண்டாம்.
5. எனக்குத் தெரிந்ததை நான் சொல்வேன்.

# 9. அறிவுக் கடல்

மாணவர்களே! நீங்கள் கடலைப் பார்த்திருக்கிறீர்களல்லவா? அக்கடலில் எவ்வளவு நீர் இருக்கிறது! அதைப்போல் மக்கள் பெருங்கூட்டமாக இருந்தால் அதை "மக்கள் கடல்" என்று கூறுவது வழக்கம். கடல் போல் மிகுதியாக மக்கள் இருக்கிறார்கள் என்பது அதன் பொருள். அவ்வாறே கடல்போல் அறிவு நிறைந்திருந்த தமிழ்நாட்டுப் பெரும்புலவர் ஒருவரை அறிவுக் கடல் என்று அழைப்பது வழக்கம். இப்பாடத்தில் அப் புலவர் பெருமானைப் பற்றிச் சிறிது அறிந்துகொள்வோம்.

நான்காம் வகுப்பில் தமிழ்த் தென்றல் திரு. வி. க. என்னும் புலவரைப் பற்றி நீங்கள் படித்தீர்கள். அவருடைய ஆசிரியர் தான் 'அறிவுக் கடல்' என்று மக்களால் பாராட்டப்படுகிறார். அவரது பெற்றோர் அவருக்கு இட்ட பெயர் 'வேதாசலம்' என்பதாகும். அது வடமொழி என்னும் வேற்றுமொழியில் அமைந்த பெயர். தமிழ்ப் பற்று மிகுந்த இவர் தமது பெயரே வேறொரு மொழியில் அமைந்திருப்பதை வெறுத்தார். அதனால், தமது பெயரை 'மறை மலை' என்ற நல்ல தமிழில் மாற்றி அமைத்துக் கொண்டார். பிற்காலத்தில் இவர் துறவி போல் வாழ்ந்ததால் "மறைமலை அடிகள்" என்று அனைவராலும் மாண்புடன் அழைக்கப்பட்டார்.

அறிவுக் கடலாகிய "மறைமலை அடிகள்," தஞ்சாவூர் மாவட்டத்தைச் சேர்ந்த நாகப்பட்டினத்திற்கு அருகிலுள்ள காடம்பாடியில் 15-7-1876-ல் சொக்கநாதருக்கும், சின்னம்மையாருக்கும் அருமைத் திருமகனாராகப் பிறந்தார். இவர் இளம் பருவத்திலேயே தமது தந்தையை இழந்து, தாயின் மேற்பார்வையில் வளர்ந்தார். மறைமலை அடிகளாருக்குச் சௌந்தரவல்லி, பொன்னம்மாள், கண்ணம்மாள் என்னும் மூன்று மனைவியர்களும், பல மக்களும் உண்டு.

அடிகள் பள்ளியில் படித்ததோடு நில்லாமல், தனிப்

பட்ட முறையில் பல தமிழ் அறிஞர்களை அடுத்துத் தமிழ் இலக்கியங்களையும், இலக்கணங்களையும் கற்றுத் தேர்ந்தார். தமிழில் புலமை பெற்றது போலவே ஆங்கிலத்திலும், வடமொழியிலும் சிறந்த புலமை பெற்ருர். அதனுற்ருன், இவரை 'மும்மொழிப் புலவர்' என்றும் கூறுவர். அடிகள் திருவனந்தபுரத்திலும், சென்னைக்கடுத்த தாம்பரத்திலும் உள்ள கல்லூரிகளில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியிருக்கிருர்.

அடிகளார் எழுதியுள்ள நூல்களுக்கு அளவே இல்லை. அவ்வளவு நூல்களையும் அறிவுத்தேன் சுரக்கும் அழகிய மலர்கள் என்று கூறலாம். 'நூருண்டு வாழ்வது எப்படி?' என்பது அவர் எழுதிய நூல்களில் ஒன்ருகும். மக்கள் நூறு வயதுவரை வாழவேண்டுமானுல் எப்படி எப்படி இருக்கவேண்டும் என்று அந்நூலில் எழுதியுள்ளார். அவர் எழுதியுள்ளபடி நடப்பவர்கள் நோய் நொடி இன்றி நெடுங்காலம் வாழலாம்.

நம் அறிவுக் கடல் எழுத்தில் மட்டுமின்றிப் பேச்சிலும் வல்லவராகத் திகழ்ந்தார். இரண்டு மூன்று மணி நேரமானுலும் மக்கள் அவரது சொற்பொழிவைக் கேட்டுக் கொண்டே யிருப்பர். நூற்றுக் கணக்கில் பணம் கொடுத்து அவரது சொற்பொழிவுகளை மக்கள் கேட்பாராயின், அவரது சொற்பொழிவின் பெருமைகளைக் கூறவும் வேண்டுமோ?

தமது அலுவல்களையெல்லாம் விட்டுவிட்டு அடிகள் ஆயிரத்துத் தொளாயிரத்துப் பதினேராம் ஆண்டில் சென்னையை அடுத்த பல்லவபுரத்தில் சென்று தங்கினுர். பல்லவபுரம் என்ற ஊரே இக்காலத்தில் பல்லாவரம் என்று அழைக்கப்படுகிறது. அங்கு தமிழையும், சைவ மதத்தையும் வளர்ப்பதற்காகப் **பொதுநிலைக் கழகம்** என்ற ஒரு கழகத்தை ஏற்படுத்தினுர். அங்கு ஏறத்தாழ 4,000 நூல்களுள்ள ஒரு பெரிய நூல் நிலையத்தை ஏற்படுத்திப் பலருக்கும் பயன்படச் செய்தார். இத்தகைய சீரும் சிறப்பும் வாய்ந்த நம் அறிவுக் கடல்–மறைமலை யடிகளார் 15–9–1950-ல் நம்மைவிட்டுப் பிரிந்தார். ஆனுல் அவரது

பெயரும், புகழும், தமிழும், தமிழ் நாடும் உள்ளளவும் நின்று நிலவுவனவாகும்.

## பயிற்சி

**1.** விடை எழுது :

1. மறைமலை அடிகளாருக்குப் பெற்றோர் இட்ட பெயர் என்ன? அதனை அவர் ஏன் மாற்றி வைத்துக் கொண்டார்?

2. மறைமலை அடிகளார் பிறந்த ஊர் எது? அவரது பெற்றோர்கள் யாவர்?

3. அவரை அறிவுக்கடல் என்று அழைப்பது எவ்வாறு பொருந்தும்? மும் மொழிப் புலவர் என்று அழைப்பது எவ்வாறு பொருந்தும்?

4. அவரது நூல்கள் எப்படிப்பட்டவை?

5. பொது நிலைக் கழகம் எங்கு நிறுவப்பட்டது? அதன் நோக்கம் யாது?

**2.** கீழுள்ள சொற்களைத் தொடர்களில் அமைத்து எழுது :

மேற்பார்வை, பணியாற்றி, சுரக்கும், பயன்பட, சீரும் சிறப்பும்.

**3.** சேர்த்து எழுது :

| | | | |
|---|---|---|---|
| சொல்வது | + உண்டு | அவருக்கு | + இட்ட |
| வேறு | + ஒரு | மக்களும் | + உண்டு |
| சென்னைக்கு | + அடுத்த | கேட்பார்கள் | + என்றால் |

**4.** பல சொற்களால் ஆக்கப்பட்டு ஒரு முழுப் பொருளைத் தருவது ஒரு தொடராதல் போல, பல தொடர்கள் சேர்ந்து வருவது ஒரு பத்தி ஆகும். ஒவ்வொரு பத்தியிலும் ஒவ்வொரு கருத்துக் கூறப்பட்டிருக்கும். ஒரே கருத்தைப் பல பத்திகளில் எழுதலாகாது. பத்தியைப் 'பாரா' என்றும் சொல்வார்கள். உனது பாடங்கள் எல்லாம் பத்தி பத்தியாக எழுதப்பட்டிருப்பதைக் கவனி.

இப்பாடத்தில் உள்ள முதல் பத்திக்கு 'அறிவுக் கடல் என்று யாரைக் கூறலாம்?' என்றும், இரண்டாம் பத்திக்கு 'வேதாசலம்-மறைமலையானார்' என்றும், தலைப்புக் கொடுக்கலாம். இவ்வாறே மற்ற பத்திகளுக்கும் ஒவ்வொரு தலைப்புக் கொடு.

# 10. கடிதங்கள்

முன் வகுப்பில் நீங்கள் கடிதம் வரைதலைப் பற்றி அறிந்திருக்கிறீர்கள். சில மாதிரிக் கடிதங்களையும் படித்துப் பயின்றிருக்கிறீர்கள். சாதாரணமாகக் கடிதங்களின் தொடக்கமும், முடிவும் அவற்றில் அடங்கியுள்ள செய்திகளுக் கேற்பவும், அவை யாருக்கு அனுப்பப்படுகின்றனவோ அதற்கேற்பவும் மாறுபடும். எனினும் பொதுவாகக் கடிதங்களை நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரித்துக் கூறலாம்.

1. நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் எழுதும் கடிதங்களைச் **சொந்தக் கடிதங்கள்** எனலாம். இவற்றின் தொடக்கமும், முடிவும் 'அன்புள்ள' என்றிருக்கும். இத்தகைய கடிதங்களில் பெரும்பாலும் சொந்தச் செய்திகளே காணப்படும். அழைப்பிதழ்களையும் இவ்வகைக் கடிதங்களில் சேர்க்கலாம்.

2. வியாபாரம் பற்றி எழுதப்படுவனவற்றை **வாணிகக் கடிதங்கள்** என்று கூறலாம். இவற்றின் தொடக்கத்தில் 'ஐயா' எனவும், முடிவில் 'உண்மையுள்ள' எனவும் எழுதுவர். இத்தகைய கடிதங்களில் நமது தேவைகளையும், வியாபார சம்பந்தமான விவரங்களையும் தெளிவாக எழுத வேண்டும்.

3. அதிகாரிகளுக்கு எழுதும் கடிதங்கள் **விண்ணப்பக் கடிதங்கள்** எனப்படும். இக்கடிதங்களில் பணிவு மிகுதியாகக் காணப்படல் வேண்டும். ஓய்வு வேண்டி ஆசிரியருக்கு எழுதும் கடிதமும் இவ்வகையைச் சேர்ந்ததே.

4. பொது நலத்திற்கான பொருள் பற்றி பொது நிலையங்களுக்கும், செய்தித் தாள்களுக்கும் வரையும் கடிதங்கள் **பொதுநலக் கடிதங்கள்** ஆகும். இவற்றில் நமது கருத்துக்கள் அனைத்தும் தெளிவாக விளக்கப்பட வேண்டும்.

கீழே சில மாதிரிக் கடிதங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றைப் படித்துப் பாருங்கள் :

## 1. சொந்தக் கடிதம்

15, நடுத்தெரு,
புளியங்குடி, மதுரை,
3-10-'59

அன்புள்ள நண்பன் மணிக்கு,

நலம். நலமறிய அவா. உன்னிடமிருந்து நீண்ட காலமாகக் கடிதமே வரவில்லை. காரணம் என்ன? உனது பள்ளித் தேர்வு முடிந்து விடுமுறை தொடங்கி இருக்குமெனக் கருதுகிறேன். எனது தேர்வில் நான் மிகவும் நன்ருக எழுதியுள்ளேன்.

விடுமுறைக்கு முதல் நாள் எங்கள் பள்ளி விளையாட்டு வெளியில் 'விளையாட்டு விழா' நடைபெற்றது. நானும் என் பள்ளித் தோழர்களும் இவ்விழாவில் சேர்ந்து விளையாடினேம். எங்கள் பள்ளி மாணவர்கள் மட்டுமல்லாமல், சுற்றுப் புறத்திலுள்ள பள்ளிகளைச் சேர்ந்த மாணவர்களும் விழாவில் கலந்து கொண்டனர்.

விழாத் துவக்கத்தில் நாங்கள் அணியணியாக வீரர்களைப் போல் நடந்து சென்ருேம். பின்னர் எங்களைச் சிறு சிறு பிரிவுகளாகப் பிரித்து விளையாட்டுக்கள், பாட்டுக்கேற்ற நடிப்புக்கள், வீர முழக்கங்கள் முதலிய பல்வேறு நிகழ்ச்சிகளில் ஈடுபடுத்தினர். ஒவ்வொரு பிரிவிற்கும் ஒவ்வோர் ஆசிரியர் இருந்து கவனித்துக் கொண்டார்.

இவ்விழாவிற்கு மாவட்டத் தண்டல் நாயகம் தலைமை தாங்கினர். அலங்கரிக்கப்பட்ட மேடையில் தலைவரும், மற்றும் சில பெரியோர்களும் அமர்ந்து விழாவைக் கண்டு களித்தனர். எங்கள் ஊர் மக்கள் பலரும் விழாவிற்கு வந்திருந்தனர். எங்கள் விளையாட்டுக்களைப் பற்றியும், நடிப்புத் திறனைப் பற்றியும் தலைவர் மிகவும் பாராட்டிப் பேசினர். இவ்விழா எங்களுக்கு மிக்க எழுச்சியை அளித்தது.

உங்கள் பள்ளியில் இதுபோன்ற விழாவிற்கு ஏற்பாடு செய்கிருர்களா?

உனது பெற்றோருக்கு என் வணக்கத்தை அறிவிக்க வேண்டுகிறேன்.

பதிலை எதிர்பார்க்கிறேன்.

அன்புள்ள,
**மா. முருகன்.**

**தோழர் து. மணிவண்ணன் அவர்கட்கு,**
36, திருவள்ளுவர் தெரு,
தேவக்கோட்டை.

## 2. வாணிகக் கடிதம்

18, மேட்டுத் தெரு,
உறையூர், திருச்சி,
7-10-59.

பதிப்பக உரிமையாளர் அவர்கட்கு,

ஐயா,

எனது சொந்த உபயோகத்திற்காகக் கீழ்க்குறித்துள்ள புத்தகங்கள் தேவைப்படுகின்றன. அவற்றின் விலையைப் பற்றியும், அவற்றைப் பதிவு அஞ்சலில் அனுப்ப இயலுமா என்பது பற்றியும் அறிவிக்க வேண்டுகிறேன். பதில் எழுதுவதற்காக எனது முகவரி எழுதிய அஞ்சல் உறை ஒன்றையும் இத்துடன் வைத்துள்ளேன்.

**தேவையான புத்தகங்கள் :**

1. திருக்குறள் விரிவுரையுடன்
2. இலக்கிய அறிமுகம்
3. தென்னாட்டு வீரர் வரலாறு

இங்ஙனம்,
உண்மையுள்ள,
**தி. இளவழகன்.**

உரிமையாளர் அவர்கட்கு,
முல்லைப் பதிப்பகம்,
பிராட்வே : சென்னை-1.

## பயிற்சி

**விடை எழுது :**

1. கடிதங்களின் நான்கு பிரிவுகள் யாவை? அவை ஒவ்வொன்றும் யார் யாருக்கு எழுதக்கூடியவை?

2. உனது பள்ளி விழாவைப் பற்றி உன் தந்தைக்கு ஒரு கடிதம் எழுது.

3. உனது பிறந்த நாள் விழாவிற்கு விருந்துண்ண வருமாறு உன் நண்பனுக்கு ஓர் அழைப்புக் கடிதம் எழுது.

# 11. ஏட்டுச் சுரைக்காய்

“ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு ஆகுமா?” என்பது மிகவும் அருமை வாய்ந்த பழமொழியாகும். ஒரு தாளில் சுரைக்காய்போல் படம் வரைந்து, அல்லது சுரைக்காய் என்று எழுதி வைத்துக்கொண்டால் அதனுல் என்ன பயன் கிடைக்கும்? அதனைக் கறி சமைத்து உண்ண முடியுமா? உண்மைச் சுரைக்காய்தான் உணவுக்கு உதவுமே ஒழிய, ஏட்டில் எழுதப்பட்டுள்ள சுரைக்காய் உதவாது. அதுபோல எதனையும் செயலில் செய்தால்தான் பயன் விளையுமே தவிர நூல்களில் எழுதி வைப்பதனுலோ, அவற்றைப் படிப்பதனுலோ மட்டும் பயன் எதுவும் உண்டாகாது.

ஏட்டில் சுரைக்காய் என்று எழுதுவது அந்த ஏட்டில் எழுதப்பட்டுள்ள காயைக் கிழித்துச் சமைத்துத் தின்பதற்காகவா? அல்லவே; அதைப்போன்ற சுரைக்காய் ஒன்றைப் பயிரிட்டோ, விலைக்கு வாங்கியோ சமைத்து உண்பதற்காகத்தான். “இன்று பகல் பன்னிரண்டு மணிக்கு எங்கள் வீட்டிற்கு விருந்து உண்ண வாருங்கள்” என்று யாராவது அழைப்பு ஒன்று எழுதிக் கொடுத்தால் அவ்வழைப்புத் தாளேயே விருந்தாக உண்பவர்களுண்டா? அதில் குறித்துள்ள நேரத்தில், குறித்துள்ள இடத்திற்குச் சென்று விருந்துண்பார்கள். அவ்வாறு செல்வதற்குத்தான் அது உதவி செய்யும். அதைப் போலவே, ஏட்டில் உள்ள எக்கருத்தும் அதை உணர்ந்து அதன்படி நடந்தால்தான் பயன் தருமே தவிர, ஏட்டில் இருப்பதனுலேயே ஒரு பயனும் அளிக்காது. செயலில் செய்வதற்கு, ஏட்டில் உள்ள கருத்து உதவியாயிருக்கும்.

யாராவது இனி உங்களேப் பார்த்து ஏட்டுச் சுரைக்காய் கறிக்காகுமா என்று கேட்டால் நீங்கள் என்ன விடை அளிப்பீர்கள்? ஏட்டிலே மட்டும் இருந்தால் ஆகாது; செயலில் செய்தால் ஆகும் என்று சொல்ல வேண்டும். அதாவது ஏட்டிலுள்ள எக்கருத்தையும்

படித்துப் புரிந்துகொண்டு அதன்படி ஒழுகினுல் அது பயனளிக்கும்.

"பள்ளிக்கணக்கு புள்ளிக்கு உதவாது" என்னும் பழமொழியும் இதேபோன்றதுதான். பள்ளிக்கூடத்தில் மாணவர் பயிலும் கணக்கு பிறகு வாழ்க்கையில் புள்ளி போடப் பயன்படாதாம். "அவ்விதம் பயன்படாத கணக்கை நாங்கள் ஏன் அரும்பாடுபட்டுக் கற்க வேண்டும்?" என்று நீங்கள் வினுவலாம். ஏட்டுச் சுரைக்காயைக் கறிக்கு உதவும்படி செய்வதைப் போலவே பள்ளிக்கணக்கையும் புள்ளிக்கு உதவும்படியாகச் செய்து கொள்ள வேண்டும். பள்ளியில் கணக்குப் பயில்வதும், பிற பாடங்களைக் கற்பதும் வாழ்க்கையில் பயன் படுத்துவதற்காகத்தான்.

நம் திருவள்ளுவர், கல்வியைப் பற்றிக் கூறும்போது இக் கருத்துக்களையே மிகவும் அருமையாகக் கூறியுள்ளார். "ஒருவன் கண்ட கண்ட நூல்களைக் கற்கக் கூடாது. சிறந்த பயனளிக்கக்கூடிய நூல்களைத் தவறு இல்லாமல் கற்கவேண்டும். கற்ற பிறகு கற்றபடி நடக்கவேண்டும்" என்று கூறுகிருர். கற்றபடி நடக்காவிட்டால் கற்றதனுல் எள்ளளவும் பயனில்லை. ஆகவே, ஏட்டுச் சுரக்காயைக் கறிக்கு ஆகும்படிச் செய்துகொள்ளவேண்டும் என்று அறிந்தோம். நீங்கள் இப்போது கற்கும் கல்வியை உங்கள் பிற்கால வாழ்க்கையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

## பயிற்சி

**1. விடை எழுது:**

1. 'ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு ஆகுமா?' என்ற பழமொழியின் கருத்து என்ன?

2. ஏட்டில் உள்ள கருத்து எப்போது பயனளிக்கும்?

3. 'பள்ளிக் கணக்கு புள்ளிக்கு உதவாது' என்ற பழமொழி எதை வற்புறுத்துகிறது?

4. கல்வியைப் பற்றித் திருவள்ளுவர் கூறியுள்ளது யாது?

**2. கீழுள்ள சொற்களைத் தொடர்களில் அமைத்து எழுது :**

புரிந்துகொண்டு, முயன்று, அருமையாக, கண்ட கண்ட, எள்ளளவும்.

**3. எதிர்ச் சொற்கள் எழுது :**

ஆகுமா, முடியுமா, பயனில்லை, அளிக்கும், இல்லாமல்.

**4. பாம்பு முத்தப்பனைக் கடித்துவிட்டது. அவன், ஐயோ! அம்மா! என்று கத்தினான்.**

மேலுள்ள சில சொற்களுக்கு அருகே (!) இவ்வாறு குறியிடப்பட்டுள்ளது. இக்குறியை வியப்பூட்டும் இடங்களிலும், உணர்ச்சிகரமான இடங்களிலும் இடுவதால் இதற்கு **வியப்புக் குறி** அல்லது **உணர்ச்சிக் குறி** என்று பெயர். இதனை **ஆச்சரியக் குறி** என்றும் கூறுவதுண்டு. உன் பாடங்களில் இக்குறி வந்துள்ள இடங்களைக் கவனி.

# 12. தந்தையைக் காத்த மகன்



திருநெல்வேலி மாவட்டத்தில், வள்ளியூர் என்று ஓர் ஊர் உளது. அங்கு பற்பல வணிகரும், செல்வரும் சிறப்புடன் வாழ்ந்திருந்தனர். வணிகருள் தனபாலர் என்பவர் வாணிகத்தின் மூலம் பெரும் பொருள் திரட்டி இருந்தார். அவருக்குப் பல வீடுகளும், பல காணி நிலங்களும் இருந்தன.

தனபாலருக்கு இரு பிள்ளைகள் இருந்தார்கள். மூத்தவன் பெயர் தம்பித்துரை; இளையவன் பெயர் மணிவேலன். அவர்களின் தாயார், அவர்கள் சிறு வயதினராய் இருக்கும்போதே இறந்துவிட்டர். எனவே, தந்தையின் பாதுகாப்பிலேயே தாயற்ற இரு சிறுவரும் வளர்ந்து வந்தனர்.

தம்பித்துரை கொஞ்சம் மந்த புத்தி யுள்ளவன்; சரியாகப் படிக்கமாட்டான்; பள்ளிக்கூடத்தில் அவன் தான் கடைசிப் பையன்; எந்த வேலையையும் சுறு சுறுப்

பாய்ச் செய்யமாட்டான். ஆகவே, தனபாலருக்குத் தம்பித்துரையைக் கண்டால் வெறுப்பாக இருந்தது. அவனை எப்போதும் அடித்துக்கொண்டும், திட்டிக்கொண்டும் இருந்தார். இளையவன் மணிவேலனோ படிப்பில் கெட்டிக்காரன்; பள்ளியில் எல்லாப் பாடங்களிலும் நிறைய மதிப்பெண்கள் பெறுபவன். எனவே, தனபாலருக்குத் தன் இளைய மகன்மீது அளவு கடந்த அன்பு பிறந்ததில் வியப்பில்லையல்லவா ?

மணிவேலனுக்குத் தன் தந்தை தன்னிடம் மட்டும் அன்பாய் இருப்பதைக் கண்டு மிகவும் பெருமையாய் இருந்தது; அண்ணனைத் தந்தை அடிக்கும் போதெல்லாம் சிரித்துச் சிரித்துக் கேலி செய்வான்; தந்தையிடம் தம்பித்துரையைப் பற்றிக் கோள் பல கூறி, அடிக்கடி அடி வாங்கி வைப்பான். இதனால் தம்பித்துரைக்கு மிகவும் வருத்தமா யிருந்தது. தவறு செய்யாத காலத்திலும் துன்பப்பட வேண்டியிருந்தது. அதைக் கண்ட அவனுடைய மாமா அவனைத் தன் வீட்டுக்கு அழைத்துச்சென்று விட்டார். அவனுடைய மாமாவின் வீடு அதே ஊரில் மறு கோடியில் இருந்தது.

தனபாலர், மணிவேலனிடம் மிகவும் அன்பாய் இருந்தார் அல்லவா ? தன் செல்வம் அனைத்தையும் அவனுக்கே உரிமையாக்க எண்ணினர். ஆனல் மணிவேலனோ, தனது செல்வாக்கு அதிகமாக ஆகக் கெட்ட பிள்ளையாய் மாறத் தொடங்கினன்; தீயவர்களுடன் சேர்ந்து பழகினன்; தீய பழக்கங்களைக் கையாண்டான்; தன் தந்தையையும் மதிக்காமல் அவர் மீது அவ்வப்போது குறைகூற ஆரம்பித்தான்.

ஒரு சமயம், தனபாலர் நோய்வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையா யிருந்தார். அவரால் எழுந்து நடமாடக்கூட இயலவில்லை. அக்காலத்தில்கூட, மணிவேலன் தந்தையின் அருகில் அமர்ந்து அவருக்கு வேண்டிய உதவிகள் புரியவில்லை. ஒரு நாள் திடீரென அவர்கள் வீட்டில் தீப் பிடித்துக் கொண்டது. காற்று பலமாக வீசவே, தீ கொழுந்து விட்டெரியத் தொடங்கியது. வீடு தீப்பிடித்

துக் கொண்டதும் மணிவேலன், நோயாளியான தன் தந்தையைக்கூடக் கவனிக்காமல் வெளியே ஓடிவிட்டான். பாவம்! நோயோடு படுத்திருந்த தனபாலரோ எழுந்து நிற்கக்கூட முடியாமல் கதறியவண்ணம் படுத்திருந்தார். தீ அவரைச் சூழ்ந்து கொண்டது. அக்கம் பக்கத்தார் வீட்டின் தீயை அணைக்க அரும்பாடுபட்டுக் கொண்டிருந்தனர். ஆனால், அது அவ்வளவு எளிதில் முடியக்கூடியதாகத் தோன்றவில்லை.

தன் வீட்டில் நெருப்புப் பற்றிக்கொண்ட செய்தியையறிந்த தம்பித்துரை, தன் மாமா வீட்டிலிருந்து ஓடோடியும் வந்தான். தன் தந்தை உள்ளே தவிப்பதைக் கேட்டுத் திடுக்கிட்டான். உடனே சிறிதும் காலந் தாழ்த்தாமல் எரியும் தீக்குள் புகுந்தான்; தன் தந்தையை மிகுந்த அல்லலுடன் தூக்கிக்கொண்டு வெளியே வந்தான். பின்னர் வீட்டின் தீயும் ஒருவாறு அணைக்கப்பட்டது.

தம்பித்துரைக்கு, நெருப்பினால் பல இடங்களில் காயமேற்பட்டிருந்தது. தனது மூத்த மகன் தக்க நேரத்தில் வந்து காப்பாற்றியதையும், தான் அவனுக்கு இழைத்த கொடுமைகளையும் எண்ணி எண்ணித் தனபாலர் வெட்கினார். “அப்பா மகனே! ஆபத்து வேளையில் உன் உயிரைப் பற்றிச் சிறிதும் பொருட்படுத்தாமல் விரைந்து வந்து என்னைக் காப்பாற்றினாயே! நீயே உத்தமன். ஐயோ! உன் அருமைக் குணத்தை அறியாமல் நான் உனக்கு எத்தனையோ தீங்குகள் செய்தேன்” என்று கூறித் தம்பித்துரையைத் தழுவிக்கொண்டார். ஆபத்துக் காலத்தில் உதவாத பிள்ளை இருந்தென்ன, இல்லாதிருந்தென்ன என்று கருதித் தனபாலர் மணிவேலனை வீட்டைவிட்டுப் போகுமாறு பணித்தார். ஆனால் தம்பித்துரையோ தன் தந்தையைச் சமாதானப்படுத்தி, மணிவேலனை மன்னிக்குமாறு செய்தான். மணிவேலனும் தன் தவறுகளை உணர்ந்து திருந்தினான்.

பிள்ளைகளே! தம்பித்துரையின் அருங்குணத்தைப் பார்த்தீர்களா? தந்தை தன்னை வெறுத்திருந்தும், ஆபத்து வேளையில் முன்வந்து உதவினான்; தன்னைக்

கேலி செய்து தற்பெருமையுடன் இருந்த தம்பியிடமும் அன்பு காட்டினுன்.

## பயிற்சி

**1. விடை எழுது :**

1. தனபாலர் ஏன் தம்பித்துரையை வெறுத்தார் ? மணி வேலனை ஏன் விரும்பினுர் ?

2. தம்பித்துரையின் மாமா ஏன் அவனைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றுவிட்டார் ?

3. நாள் செல்லச் செல்ல மணிவேலன் எவ்வாறு மாறினுன்?

4. தனபாலரைத் தீயிலிருந்து காப்பாற்றியவன் யார் ? எவ்வாறு ?

5. மணிவேலன் மீது தனபாலர் ஏன் கோபங்கொண்டார் ? அவரைச் சமாதானம் செய்தவன் யார் ?

**2. கீழுள்ள சொற்களைத் தொடர்களில் அமைத்து எழுது.**

அளவு கடந்த, கொழுந்து விட்டெரிய, அக்கம் பக்கத்தார், காலந் தாழ்த்தாமல், பொருட்படுத்தாமல்.

**3. சேர்த்து எழுது :**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஓர் | + | ஊர் | திரட்டி | + | இருந்தார் |
| வியப்பு | + | இல்லை | அடிக்கும்போது | + | எல்லாம் |
| இருந்தார் | + | அல்லவா | அருகில் | + | அமர்ந்து |

**4. இப்பாடத்திலிருந்து அறுவகைப் பெயருக்கும் இரண் டிரண்டு சொற்கள் எடுத்து எழுது.**

# 13. பாஞ்சாலங்குறிச்சி

பாஞ்சாலங்குறிச்சி என்பது தமிழ் நாட்டில் புகழ் பெற்று விளங்கிப் பின்னர் மறைந்துபோன ஓரூரின் பெயராகும். இன்று அப் பெயரோடு விளங்கும் ஊர் எங்கும் இல்லை. ஆனால் தமிழ் மக்களின் வீரம் செறிந்த உள்ளத்தில் அது மங்காமலும், மறையாமலும் விளங்குகிறது. பாஞ்சாலங்குறிச்சி என்றவுடன் கட்டபொம்மனும், ஊமைத்துரையும் நம் நினைவில் தோன்றுவார்கள். அக் கட்டபொம்மனைப்பற்றி நீங்கள் நான்காம் வகுப்பில் படித்திருக்கிறீர்களல்லவா? இணையற்ற வீரனாகிய அவன் கோட்டை கட்டி ஆண்ட ஊரே பாஞ்சாலங்குறிச்சி என்பது.

வாணிபம் செய்து பொருளீட்டுவதற்காக இங்கு வந்த ஆங்கிலேயர்கள் மெல்லமெல்ல இந் நாட்டையே ஆள்பவராக மாறிவிட்டனர். அவ் வெள்ளையரின் ஆட்சியைத் தமிழ்நாடுதான் முதன் முதலில் எதிர்த்துப் போர் முழக்கம் செய்தது. இராமநாதபுரத்தில் கி. பி. 1797-ஆம் ஆண்டில் வெள்ளையர் ஆட்சியை எதிர்த்து வரிகொடா இயக்கம் ஒன்று தொடங்கப்பட்டது. சிற்றரசர்கள்போல் விளங்கிய பல பாளையக்காரர்கள் அதில் சேர்ந்தனர். அவ்வியக்கத்திற்குத் தலைமை வகித்துப் போரை நடத்தியவன் வீரபாண்டியக் கட்டபொம்மன் ஆவன். அவன் பாஞ்சாலங்குறிச்சியில் ஆங்கிலேயர்களுடன் நடத்திய போர் நாற்பத்தொரு நாட்கள் நடைபெற்றதென்பர். அவன் மறைந்தபின் அவன் தம்பியாகிய ஊமைத்துரை என்பவன் வெள்ளையரை எதிர்த்து நூற்றுநான்கு நாட்கள் போரிட்டானும். இவ் விரு போர்களும் நடந்த இடமே பாஞ்சாலங்குறிச்சி.

இவ்வூர் பதினேராம் நூற்றுண்டின் பிற்பகுதியில் கெட்டி பொம்மு என்னும் மன்னரால் அமைக்கப்பட்டது. இது திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள பாளையங்கோட்டையிலிருந்து முப்பது கல் தொலைவில் இருந்தது. பாஞ்சாலங்குறிச்சி மண்ணின் சிறப்பைக் குறித்துப் பல

கதைகள் வழங்குகின்றன. அதனுற்ருன் ஆங்கிலேயர்கள் அதனைக் கைப்பற்றியவுடன் அங்கிருந்து யாரும் எதையும் எடுத்துச் செல்லக்கூடாதென்றும், அங்கு யாரும் குடியிருக்கக் கூடாதென்றும் கட்டளையிட்டனர் போலும்.

பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை பார்வைக்கு எளிதாகத் தெரிந்தாலும் வெள்ளையரின் பீரங்கிகளுக்கும் ஈடு கொடுக்கும் வன்மை பெற்று விளங்கியது. கோட்டையின் மதில் வெளிப்புறம் செங்குத்தாகவும், உட்புறம் சரிவாகவும் இருந்தது. அத்தகைய சுவர்கள் அடுத்தடுத்து இரண்டு அமைக்கப்பட்டிருந்தன. மிக்க உயரமும், அகலமும் வாய்ந்த சுவர்களால் சூழப்பட்ட அக் கோட்டையின் நாற்புறங்களிலும் முற்றுகையிடும் எதிரிகளைத் தாக்குவதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் செம்மையாகச் செய்யப்பட்டிருந்தன.

இவ்வளவு வன்மை வாய்ந்த கோட்டையும் தகர்க்கப்பட்டதென்பதை நம்ப முடியவில்லை யல்லவா? ஆனுல் உண்மை அதுதான். கி. பி. 1799-ம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் முதல்நாள் வீரபாண்டியக் கட்டபொம்மன் ஆங்கிலேயரிடம் சிறைப்பட்டான். அன்றே புகழ் வாய்ந்த அக் கோட்டையும் “பானர்மென்” என்னும் ஆங்கிலத் தளபதியால் தகர்த்தெரியப்பட்டது.

ஆனுல் மீண்டும் அதேயிடத்தில் முன்னர் இருந்ததை விட வலிய கோட்டை ஒன்று எழுந்தது. கி. பி. ஆயிரத்து எண்ணூற்று ஓராம் ஆண்டு பிப்ரவரித் திங்களில் அதனை ஊமைத்துரை எழுப்பினுன். இரண்டாயிரம் வீரர்கள் அல்லும் பகலும் அயராதுழைத்து ஆறே நாட்களில் அதனைக் கட்டி முடித்தார்கள். உறுதி வாய்ந்த பாஞ்சாலங்குறிச்சி மண்ணில் பனஞ்சாற்றை ஊற்றிப் பிசைந்து அமைக்கப்பட்டதாதலின் அம் மண்சுவர் கற்சுவரினும் வலியதாக இருந்தது. ஊமைத்துரையும் ஆங்கிலேயரிடம் பிடிபட்டபின் இப் புதிய கோட்டையும் ஆங்கிலப் பீரங்கிகளுக்கு இரையாயிற்று. ஆனுல், இதை இடிப்பதற்கு அவர்களிடமிருந்த பீரங்கிகளால் முடியாது போகவே பெரிய பீரங்கிகளை வரவழைக்க நேர்ந்ததாம்.

இவ்வாறு இரு பெரும் போர்களைக் கண்டு அழியாப் புகழ் பெற்ற பாஞ்சாலங்குறிச்சியின் அழிவு தமிழர் அனைவருக்கும் பெருந் துன்பத்தைத் தந்தது. இன்று ஒரு மண் மேட்டையும், கிணற்றையும் தவிர வேறு அடையாளமெதுவும் அங்கு காணப்படவில்லை. அவ்வூர் புறத்தில் அழிந்தாலும் தமிழர்களின் அகத்தில் பசுமரத்தாணியாய்ப் பதிந்து நின்று வீரக் கனலை மூட்டிக்கொண்டிருக்கிறது. தமிழ்க் குழந்தைகளாகிய உங்களுக்கும் பஞ்சாலங்குறிச்சியின் வீர வரலாறு விடுதலை வேட்கையையும், வீர உணர்ச்சியையும் அளிப்பதாக.

## பயிற்சி

**விடை எழுது :**

1. கட்டபொம்மன் தலைமையில் நடந்த இயக்கம் யாது? அது எப்போது, ஏன் நடந்தது?

2. பாஞ்சாலங்குறிச்சியின் மண்ணுக்கே தனிச் சிறப்பு உண்டு என்பது எதனல் தெரியமுடிகிறது?

3. பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையின் அமைப்பை எழுது.

4. ஊமைத்துரை அக் கோட்டையை எவ்வாறு புதுப்பித்தான்?

## 14. ஊன் உண்ணும் செடிகள்

செடிகளையும், இலைகளையும் தின்னும் பூச்சிகளைப் பற்றி நீங்கள் அறிந்திருக்கிறீர்களல்லவா? ஆனால், பூச்சிகளைத் தின்னும் சில செடிகளும் இருக்கின்றன என்பதை அறிந்தால் நீங்கள் வியப்படைவீர்கள். சாதாரணமாக எல்லாச் செடிகளும் தமக்கு வேண்டிய உணவை மண்ணிலிருந்தே பெறுகின்றன. ஆனால் ஊன் உண்ணும் செடிகள், மண்ணிலிருந்து உணவை உறிஞ்சுவதுடன், பூச்சிகளையும் பிடித்துத் தின்கின்றன.

ஊன் உண்ணும் செடிகள் பூச்சிகளைக் கவர்வதற்காகப் பல வண்ணங்களுடனும், மணங்களுடனும் தோற்றமளிக்கின்றன; தம்மீது அமரும் பூச்சிகளைப் பிடித்துக் கொள்வதற்கு வேண்டிய உறுப்புக்களையும் பெற்றிருக்கின்றன. இச் செடிகள் பூச்சிகளைப் பிடிக்கின்ற விதமும் அவற்றைக் கொன்று தின்கின்ற விதமும் மிகவும் புதுமையாய் இருக்கும்.

முதலாவதாக 'சண்டியூ' என்னும் செடியைக் கவனிக்கலாம். இச் செடியின் இலைகள் நீண்ட காம்புகளின் முனைகளில் உள்ளன. இவ்விலைகளின் நுனிகள் உட்புறம் குவிந்து இருக்கின்றன. அவற்றின் வெளிப்புறத்தில் பிசின் போன்ற ஒருவித நீரைச் சுரக்கும் மயிர்கள் இருக்கின்றன. காலை நேரத்தில் சூரிய ஒளியில், இந்நீர்ப் பொருள் பளபளக்கும். இந்த ஒளியினால் கவரப்பட்ட பூச்சி செடியின்மீது அமர்ந்ததும், பசையில் ஒட்டிக்கொள்ளும். பிறகு பூச்சி பறக்க முடியாமல் உயிருக்குப் போராடும். உடனே செடி அப் பூச்சியை இலையின் உட்புறத்தில் சுருட்டி வைத்துக் கொள்ளும்; செறிக்கச் செய்யும்



நீரைச் சுரந்து பூச்சியின் சத்தை யெல்லாம் உறிஞ்சிக் கொள்ளும்; பிறகு தோலை வெளியே தள்ளிவிடும். இவ் வகைச் செடிகள் அமெரிக்காவில் உள்ளன.

'நிபந்தீஸ்' என்னும் மற்றொரு வகைச் செடியைக் கிழக்கிந்தியத் தீவுகளில் காணலாம். இச் செடியின் இலை யின் நுனி கம்பி போல் நீண்டு, முனையில் ஒரு குடம் போன்ற உறுப்புடன் இருக்கும். இந்தக் குடத்திற்கு அழகிய நிறத்துடன் கூடிய ஒரு மூடியும் உண்டு. மூடி யின் நிறத்தால் கவரப்பட்ட பூச்சி தேன் குடிக்க குடத்தின் விளிம்பின் மேல் உட்காரும். குடத்தின் வாய் வழவழப்பாய் இருப்பதால், பூச்சி குடத்திற்குள் வழுக்கி விழுந்து விடும். உடனே மூடி தானுகவே மூடிக்கொள்ளும். பூச்சி வெளியே வரமுடியாமல் உள்ளேயே சிறைப்பட்டு இறக்கும்; பிறகு அங்கு சுரக்கும் நீரில் கரைந்து செடிக்கு உணவாகும்.



"டையோனியா' என்னும் இன்னொரு வகைச் செடி யும் அமெரிக்காவில் இருக்கிறது. இதன் இலைகள் இரண்டு பாகங் களாகப் பிரிந்திருக்கின்றன. ஒவ்வொரு பாகத்தின் விளிம்பும் முட்கள் போன்றுள்ளது. பூச்சி கள் அம்முட்களில் பட்டதும், இலையின் இரு பாகங்களும் மூடிக்கொள்ளும். பூச்சிகள் இலை களின் இடையே அகப்பட்டு, அங்கு உண்டாகும் நச்சு நீரி ஞல் இறக்கும். அவை முழுதும் செடிக்கு உணவான பின்னரே இலைகள் முன்போல் திறக்கும்.



இவை போன்று செடிகளின் வாழ்க்கையில் பல அற்

புதங்கள் உள்ளன. அவற்றைப்பற்றி இன்னும் விரிவாக மேல் வகுப்புக்களில் தெரிந்துகொள்ளலாம்.

### பயிற்சி

**1.** விடை எழுது :

1. சாதாரணமாகச் செடிகள் உணவை எங்கிருந்து பெறுகின்றன ?

2. ஊன் உண்ணும் செடிகள் எவ்வாறு பூச்சிகளைக் கவர்கின்றன ?

3. ஊன் உண்ணும் செடி ஒன்றைப் பற்றி ஐந்து தொடர்கள் எழுது.

**2.** கீழுள்ள சொற்களில் ஒரே பொருள் உள்ளவைகளை இணைத்து எழுது :

| | |
|---|---|
| வியப்பு | பக்கம் |
| வண்ணம் | அதிசயம் |
| தோற்றம் | காட்சி |
| புறம் | நிறம் |
| அற்புதம் | ஆச்சரியம் |

**3.** கீழுள்ள தொடர்களைத் திருத்தமாக எழுது :

1. நீங்கள் பூச்சிகளை உண்டு கேள்விப்பட்டால் வியப்படைவீர்கள் உயிர்வாழும் தாவரங்களைப்பற்றி.

2. பூச்சிகள் தம்மீது அமரும் செடிகளைப் பிடித்துக் கொள்வதற்கேற்ற உறுப்புக்களைப் பெற்றிருக்கின்றன.

3. சண்டியூ இலையின் காம்புகள் நீண்ட செடிகளின் முனைகளில் உள்ளன.

4. நிபந்தீஸ் என்ற கம்பியின் இலையின் நுனி செடிபோல் நீண்டு இருக்கும்.

5. இலைகள் பூச்சிகளின் இடையே அகப்பட்டு அங்குண்டாகும் நச்சு நீரினால் இறக்கும்.

6. இப்பாடத்தில் உள்ள 3, 4, 5 பத்திகளைப் படித்து, அவற்றிற்குத் தனித்தனித் தலைப்புக்களைக் கொடு.

# 15. பொன் விழா

மாணவர்களின் தமிழறிவை வளர்ப்பதற்காகப் பள்ளிக்கூடங்களில் தமிழ்க் கழகங்கள் ஏற்படுத்தப்படுகின்றன. அதேபோல் பண்டைக் காலத்தில் நம் நாட்டில் தமிழ்ச் சங்கங்களை ஏற்படுத்தித் தமிழை வளர்த்தனர். தமிழறிவிற் சிறந்த புலவர் பலர் ஒன்று சேர்ந்து, ஆராய்ச்சிகள் செய்து, நூல்கள் இயற்றி, வெளியிடும் இடத்திற்குத்தான் சங்கம் என்ற பெயர் இருந்தது. பழந்தமிழ் நாட்டில் மூன்று சங்கங்கள் இருந்ததாகத் தெரிகிறது. பாண்டிய அரசர்களே இத் தமிழ்ச் சங்கங்களைத் தோற்றுவித்து நடத்தி வந்திருக்கின்றனர்.

கடலில் மூழ்கிவிட்ட தென்மதுரையில்தான் முதல் சங்கம் இருந்தது. தென்மதுரை கடலில் மூழ்கிய பின்னர், கபாடபுரம் என்னும் ஊரில் இரண்டாஞ் சங்கத்தைத் தோற்றுவித்தனர். பிறகு அதுவும் கடலில் மூழ்கிவிட்டதால் பாண்டியர்கள், இப்போதுள்ள மதுரையில் மூன்ருஞ் சங்கத்தை உண்டாக்கினுர்கள். அச்சங்கமும் பல ஆண்டுகள் கழித்து மறைந்து போயிற்று. இம் மூன்று சங்கங்களிலும் தமிழ் நாட்டில் அவ்வக் காலங்களில் வாழ்ந்திருந்த பெரும் புலவர்கள் பலரும் கூடித் தமிழாராய்ந்திருக்கின்றனர். அவர்கள் நமக்காக எழுதிவைத்த அருமையான நூல்களில் பல கடலில் மூழ்கிமறைந்தன. எஞ்சியுள்ள சில நூல்களைத்தான் நாம் சங்ககால நூல்கள் என்று அழைக்கிருேம்.

தமிழ் வளர்ச்சிக்காகத் தமிழ் நாட்டில் முச்சங்கங்களுக்குப்பின் எச்சங்கமும் தோன்றவில்லை. தமிழ் ஆர்வமும், தமிழறிவும், தமிழ் வளர்ச்சியும் குன்றத் தொடங்கின. நம் நாட்டில் வேற்று நாட்டாரின் ஆட்சி ஏற்பட்ட காரணத்தினுல், தமிழ்ப் பற்று தமிழர்களின் உள்ளத்திலிருந்து அற்றே போய்விட்டது. தமிழ் மக்களும் தமது அருமைத் தாய்மொழியை மறந்து, வேற்று மொழிகளிடத்தில் தங்கள் கவனத்தைச் செலுத்தலாயினர். தமிழர் சொந்தத் தாயை மறந்த பிள்ளைகளைப்போல் ஆயினர்.

இக்குறைகளை யெல்லாம் போக்கி, தமிழ் மக்களின் உள்ளத்தில் மீண்டும் தமிழ்ப் பற்றையும் தமிழறிவையும், தமிழ் வளர்ச்சிக்கான ஆவலையும் தூண்டுவதற்காக மூன்ரும் சங்கம் இருந்து மறைந்த மதுரையில் நான்காம் தமிழ்ச் சங்கம் தோன்றியது. இச்சங்கத்தைத் தோற்றுவித்தவர் உயர்திரு. பாண்டித்துரைத் தேவர் என்னும் வள்ளலாவர். ஆயிரத்துத் தொளாயிரத்து ஓராம் ஆண்டு செப்டம்பர் திங்கள் பதினுன்காம் நாளே நான்காம் தமிழ்ச் சங்கம் அரும்பிய நன்னுளாகும்.

இச்சங்கம் தோன்றியது முதல் அது நன்கு நடைபெறுவதற்கு வேண்டிய பொருள் வசதி முதலியவற்றை இராமநாதபுரம் அரச குடும்பத்தினர் ஏற்படுத்தி வைத்துள்ளனர். இச்சங்கத்தின் வளர்ச்சிக்குப் பல தமிழறிஞர்களும், வள்ளல்களும் பாடுபட்டுள்ளனர். இது இக்காலத்தில் தமிழ் வளர்ச்சிக்காகப் பல்வேறு வகைகளிலும் தொண்டாற்றி வருகின்றது. இதன் சார்பாக ஒரு கல்லூரியும், நூல்நிலையம் ஒன்றும், ஆராய்ச்சி நிலையம் ஒன்றும், செந்தமிழ் என்னும் திங்கள் தோறும் வெளிவரும் இதழ் ஒன்றும் நடைபெற்று வருகின்றன.

இவ்வரும்பெரும் சங்கம் தொடங்கப்பட்டு ஐம்பது ஆண்டுகள் முடிந்துவிட்டன. எனவே, ஐம்பது ஆண்டுகள் நிறைந்ததற்கு அறிகுறியாகக் கொண்டாடப்படும் பொன் விழாவை அண்மையில் தமிழ்மக்கள் அனைவரும் சேர்ந்து கொண்டாடினுர்கள். இப்பொன்விழா ஆயிரத்துத் தொளாயிரத்து ஐம்பத்தாரும் ஆண்டு மே திங்கள் முப்பதாம் நாளிலிருந்து சூன் ஐந்தாம் நாள்வரை மதுரையம்பதியில் மிகமிகச் சிறப்புடன் நடந்தேறியது. தமிழ் நாட்டில் உள்ள எல்லாத் தலைவர்களும், எல்லா அறிஞர்களும் அவ்விழாவில் கலந்துகொண்டனர். விழா நடைபெற்ற ஏழுநாட்களும் பேச்சும், பாட்டும்,கூத்தும் ஆகிய மூன்றுவகையான நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. எனவே அங்கு முத்தமிழும் முழங்கின என்று கூறலாம். வாழ்க தமிழ்! வளர்க தமிழ்ச் சங்கம்!!



## பயிற்சி

**1. விடை எழுது :**

1. தமிழ்ச் சங்கங்கள் தோன்றியதேன்?

2. பண்டைத் தமிழ்ச் சங்கங்கள் எத்தனை? அவை எங்கெங்கு இருந்தன?

3. நான்காம் தமிழ்ச் சங்கம் எப்போது தோன்றுவிக்கப் பட்டது? யாரால் தோற்றுவிக்கப்பட்டது?

4. நான்காம் தமிழ்ச் சங்கத்தின் சார்பாக நடத்தப்படுபவை யாவை?

5. பொன் விழா என்று எதற்குப் பெயர்?

**2. கீழுள்ள சொற்களைத் தொடர்களில் அமைத்து எழுது :**

தோற்றுவித்து, எஞ்சியுள்ள, அரும்பிய, அறிகுறி, அண்மையில்.

**3. கீழுள்ளவைகளை அறிந்துகொள் :**

வெள்ளிவிழா—இருபத்தைந்தாம் ஆண்டு நிறைவு விழா.

பொன் விழா—ஐம்பதாம் ஆண்டு நிறைவு விழா.

வைர விழா—அறுபதாம் ஆண்டு நிறைவு விழா.

நூற்றாண்டு விழா—நூறாம் ஆண்டு நிறைவு விழா.

**4. கீழுள்ள எச்சத் தொடர்களை முற்றுத் தொடர்களாக்கு :**

1. பாண்டிய அரசர் தமிழ்ச் சங்கங்களைத்....................

2. சங்கப் புலவர்கள் நமக்காகப்.................

3. வேற்று நாட்டு ஆட்சி நம் நாட்டில் ஏற்பட்டதால் ..................

4. தமிழ் மக்களின் உள்ளத்தில்..................

5. மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் பொன் விழா..............

**5. முன் வகுப்பில் கற்றுள்ள திணை, பால், எண், இடம், வேற்றுமை ஆகியவைகளை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள்.**

திணை—உயர்திணை, அஃறிணை என இருவகைப்படும்.

பால்—ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன் பால், பலவின்பால் என ஐவகைப்படும்.

எண்—ஒருமை, பன்மை என இரு வகைப்படும்.

இடம்—தன்மை, முன்னிலை, படர்க்கை என மூவகைப்படும்.

தன்மைக்கும் முன்னிலைக்கும், திணையும், பாலும் கூற முடியாது. எண்தான் கூறலாம்.

கீழுள்ள கட்டங்களை நிரப்பு:

| | | திணை | பால் | எண் | இடம் |
|---|---|---|---|---|---|
| 1. | பாண்டியர் | | | | |
| 2. | சங்கம் | | | | |
| 3. | நடத்தினர் | | | | |
| 4. | அரசன் | | | | |
| 5. | நீ | | | | |
| 6. | நாங்கள் | | | | |
| 7. | தமிழரசி | | | | |
| 8. | மூழ்கின | | | | |

# 16. கொக்கு

"கொக்கின் தலையில் வெண்ணெயை வைத்துப் பிடி" என்னும் பழமொழியை நீங்கள் கேட்டிருக்கலாம். கொக்கு பிடிப்பது எளிதன்று; அதற்கு மிக்க திறமை வேண்டும். ஆனால், அதனைப் பிடிப்பதற்கு ஒரு குறுக்கு வழியும் உண்டு. அதாவது காலை நேரத்தில் கொக்கு உட்கார்ந்திருக்கும் இடத்திற்கு நாம் செல்ல வேண்டும். அருகில் சென்று அதன் தலையில் சிறிது வெண்ணெயை வைத்து விட்டு வந்துவிட வேண்டும். வெயில் படப்பட அவ்வெண்ணெய் உருகி நெய்யாகி வழிந்து வந்து கொக்கின் கண்களை மறைத்து விடும். அதனால் கொக்கு கண் தெரியாமல் திண்டாடும். உடனே நாம் ஓடிப்போய் அதனைப் பிடித்துக் கொள்ளலாம்.

கொக்கின் தலையில் வெண்ணெயை வைப்பது எங்ஙனம்? நம்மைக் கண்டதும் அது பறந்து விடாதா? என்பன உங்கள் வினாக்கள். அவை கிடக்கட்டும். கொக்கின் தலையில் வெண்ணெயை வைத்து விட்டுப் பிறகு அது உருகும் வரை காத்திருப்பதைவிட, வெண்ணெயை வைக்கும் போதே அதனைப் பிடித்துக் கொண்டால் என்ன என்று நான் உங்களைக் கேட்கிறேன். ஆராய்ந்து பார்த்தால் அது பொருத்தமற்ற யோசனை என்பது தெளிவாகிறது. இவ்வாறு பொருந்தாத யோசனை கூறுபவர்களைப் பார்த்து "ஐயா! நீங்கள் கொக்கின் தலையில் வெண்ணெயை வைத்துப் பிடிக்கச் சொல்கிறீர்களே!" என்பது வழக்கம்.

ஏரி, குளம், ஆறு முதலிய நீர் நிலைகளிலும், வயல் வெளிகளிலும் நீங்கள் கொக்குகளைக் காணலாம். அவை பல வகைப்படும். அவற்றில் சில வகைக் கொக்குகளைப் பற்றி நீங்கள் இப்பாடத்தில் தெரிந்து கொள்ளலாம். மாலை நேரங்களில் போர் வீரர்களைப் போன்று வரிசை வரிசையாக அணிவகுத்துப் பறந்து செல்லும் கொக்குகளை ஊர்ப்புறங்களில் இன்றும் காணலாம். அவற்றைக் கண்ட குழந்தைகள்,

" மடையான் மடையான் பூப்போடு
மடைக்கு ரெண்டு பூப்போடு
செப்புக் குடம் வாங்கித் தாரேன்
சேர்த்து ரெண்டு பூப்போடு "

என்று தம் பொற்கைகளை மேலுயர்த்திக் கொண்டு பாடுவதையும் கேட்கலாம்.

கொக்குகளில் 'மடையான்' என்பதும் ஒரு வகை. இவை நன்செய் நிலங்களில் உள்ள மடைகளின் ஓரத்தில் உட்கார்ந்திருப்பதால் இவற்றிற்கு இப்பெயர் வந்தது போலும். "ஓடு மீன் ஓட உரு மீன் வருமளவும் வாடியிருக்கும்" இவைகளை "நொள்ளை மடையான்" என்றும் சில ஊர்களில் அழைக்கிறுர்கள். கீழ் நோக்கி மீன் வருவதையே பார்த்துக் கொண்டு இருக்கும் போது இவைகளைக் கண்டவர்கள் இவற்றிற்குக் கண் இல்லை என்று எண்ணி இவற்றைக் குருட்டுக் கொக்காகக் கருதி விட்டனர் போலும். இவை சிறு மீன்களையும், சிறு தவளைகளையும் பிடித்துத் தின்னும். இவை தரையில் உட்கார்ந்திருக்கும் போது மங்கலான களிமண் போன்ற நிறமுடையவையாய்த் தோன்றும். ஆனுல் இறகுகளை விரித்துப் பறக்கும்போது வெண்மையாய்த் தோன்றும். மடையான் நெடுநேரம் ஆடாமல் அசையாமல் ஒரே இடத்தில் உட்கார்ந்திருக்க வல்லது.

மற்றொரு வகை "வெண் கொக்கு" எனப்படும். இதனைக் 'கொக்கு' என்ற பொதுப் பெயராலேயே அழைப்பதும் உண்டு. இவ்வகைக் கொக்குகள் தூய வெண்ணிறம் வாய்ந்து காண்பதற்கு மிகவும் அழகாயிருக்கும். இவை நீண்டு, பரந்த இறகுகளை உடையவை; ஆதலால் நெடுந் தொலைவிலுள்ள இடங்களுக்கும் இவற்றுல் பறந்து செல்ல இயலும். ஆயினும் இவை பறக்கும் போது இறகுகள் அசைவது கூட நமக்குத் தெரியாது. ஏதோ அவை காற்றில் மிதப்பதைப் போலவே தோன்றும். சிற்சில வேளைகளில் இவை வான வெளியில் வளைந்து வளைந்து கரணமிட்டு விளையாடுவதும் உண்டு.

மூன்றுவது வகையாக "மாட்டுக் கொக்கு" என்பவை

களைக் குறிப்பிடலாம். இவ்வகைக் கொக்குகள் நீர் நிலைகளிலோ, வயல் வெளிகளிலோ அன்றி புல் வெளிகளில் மேயும் மாட்டு மந்தைகளின் இடையில் காணப்படுவதால் இவற்றை ''மாட்டுக் கொக்கு'' என்றனர் போலும். இவை மாடுகளின் மேல் ஒட்டிக் கொண்டிருக்கும் உண்ணி என்னும் ஒருவகைப் பூச்சிகளைத் தின்பதற்காகத்தான் மந்தைகளுக்கு வருகின்றன என்று தவருகக் கருதியவர்கள் இவற்றை ''உண்ணிக் கொக்கு'' என்றும் அழைக்கிருர்கள்.

ஆனுல் இவை உண்ணிகளைத் தின்பதற்காக மாடுகளைத் தொடர்வதில்லை; மாடுகள் நடந்து செல்லும் போது அவற்றின் கால்கள் பட்டுத் துள்ளிக் குதிக்கும் தத்துக்கிளி போன்ற பூச்சிகளைத் தின்பதற்காகத்தான் மாடுகளைப் பின் தொடர்ந்து செல்கின்றன. இவை தோற்றத்தில் சிறிய வெண் கொக்கைப் போல் இருக்கும். இவற்றின் அலகு மஞ்சள் நிறமுடையது.

பகல் முழுதும் மரமொன்றில் தூங்கிவிட்டு இருட்டும் நேரத்தில் ''வாக்வாக்'' என்று ஒலித்துக் கொண்டு வான் வழியே பறந்து செல்லும் ''வக்கா,'' நாரையைப் போலவே காணப்படும் நரையான் முதலியனவும் இக்கொக்கின் இனத்தைச் சேர்ந்தவையே. இவைகளைப் போன்ற பறவைகள் ஆயிரக்கணக்கில் தங்கியிருப்பதை செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள வேடந்தாங்கல் என்னும் ஊரில் காணலாம். அக்கண் கொள்ளாக் காட்சியை நீங்கள் ஒரு முறையேனும் அங்கு சென்று கண்டுகளிப்பது நலம்.

## பயிற்சி

**1. விடை எழுது :**

1. ''கொக்கின் தலையில் வெண்ணெயை வைத்துப் பிடி'' என்னும் பழமொழியை விளக்கி எழுது.
2. மடையான் என்று ஒருவகைக் கொக்கிற்குப் பெயர் வந்தது எதனுல்?
3. வெண் கொக்கைப் பற்றிப் பத்து வரிகள் எழுது.
4. உண்ணிக் கொக்கை எங்கே காணலாம்? ஏன்?

**2. எதிர்ச்சொற்கள் எழுது :**

பழமொழி; குறுக்குவழி; உருகும்; மறைக்கும்; வெண்மை; பொதுப் பெயர்; பரந்த; மிதப்பது; நலம்.

# 17. தொண்டர் படை



பிள்ளைகளே! படத்தில் உள்ள சிறுவர்களைப் பாருங்கள். இவர்கள் அனைவரும் ஒரே மாதிரி உடை அணிந்திருப்பதைக் கவனியுங்கள். முழங்கால் வரைக் காற்சட்டையும், முழங்கைவரை உடற் சட்டையும், இடையில் பட்டையும் அணிந்திருக்கிறார்களல்லவா? இவர்களின் கழுத்தைச் சுற்றி ஒரு துண்டுத் துணியையும் கட்டியிருக்கிறார்கள். இந்தக் கழுத்துத் துணிகள்கூட ஒரே நிறமாய் உள்ளன. இவர்கள் யார் தெரிகிறதா? இவர்கள் தொண்டர் படையைச் சேர்ந்தவர்கள். இவர்களனைவரும் தொண்டர்கள். இவர்களது படை, சாரண இயக்கத்தைச் சேர்ந்தது. எனவே, இவர்களைச் சாரணர்கள் என்றும் அழைப்பர்.

இத்தகைய தொண்டர்களை மக்கள் திரளாகக் கூடும் திருவிழாக்களிலும், பெருங்கூட்டங்களிலும் காணலாம்.

அங்கு இவர்கள் மக்களுக்குத் தேவையான உதவிக ளனைத்தையும் புரிவர். இவர்கள் ஒழுங்குமுறை தவரு மல் நடந்து கொள்வர். எப்போதும் புன்னகை தவழும் முகத்துடன் பிறருக்கு உதவி புரிய முன்வருவர்.

'தயாராய் இரு' என்பதே இவர்களது குறிக்கோள். தேவையேற்படும் காலங்களிலெல்லாம் பிறருக்குத் தொண்டு புரியத் தயாராயிருக்க வேண்டு மென்பதே இவர்களின் நோக்கம். 'ஆண்டவனுக்கும், அரசுக்கும், மக்களுக்கும் நாம் கடமைப்பட்டவர்கள்; பிறருக்கு எப் போதும் தொண்டு புரிவதே நமது நோக்கம்; இயக்கத் தின் சட்டதிட்டங்களுக்கு அடங்கி நடத்தலே எமது பெருமை' என்ற மூன்று பெருங் கொள்கைகளைக் கொண் டவர்கள் இத்தொண்டர்கள். இவை மூன்றும் நாட்டின் நற்பணிக்குத் தேவையான உயர்ந்த கொள்கைகள் அல்லவா?

இவர்கள் தொண்டாற்றுவதற்கேற்ற உளப்பண்பு பெற்றவர்களாய் இருக்க வேண்டும். அத்துடன் தக்க சமயத்தில், தக்க முறையில் உதவுவதற்கான அறிவும் பெற்றிருக்க வேண்டும்; நல்ல உடலுரமும் அடைந் திருக்கவேண்டும். இவற்றிற்கான பயிற்சிகளனைத்தும் தொண்டர் படையில் இவர்களுக்கு அளிக்கப்படுகின்றன. முதலுதவி செய்தல், தீயிலிருந்து காப்பாற்றுதல், விரை வினில் செய்தியனுப்புதல் போன்ற பலதிறப்பட்ட அறிவு கள் செயல் முறையில் இவர்களுக்குக் கற்பிக்கப்படு கின்றன.

இவர்கள் அடிக்கடி கூட்டமாக இன்பச்செலவு சென்று வெளியே தங்குவார்கள். அங்கே தங்களுக்குத் தேவை யான உணவைத் தயாரித்தல் முதற்கொண்டு எல்லா அலுவல்களையும் தாங்களே செய்து கொள்வர். இதன் மூலம் இவர்கள் தன்னம்பிக்கையையும் பெறுகின்றனர். ஒற்றுமை, சுறுசுறுப்பு, உண்மை பேசுதல் முதலிய நற் பண்புகளையும் வளர்த்துக் கொள்கின்றனர்.

இத்தகைய தொண்டர் படைகள் பல பள்ளிகளில் உள்ளன. இவ்வியக்கத்தில் சேர விரும்பும் பள்ளிச் சிறு

வர்களைத் திரட்டி இப்படைகள் அமைக்கப்பட்டுள்ளன. சிறுவர்க்கான தொண்டர் படையில் சிறுவர்களின் வயதுக்கேற்ப இரு பிரிவுகள் உண்டு. அவை இளந் தொண்டர் படை, தொண்டர் படை என்பன. தொண் டர்களுக்கு அளிக்கப்படும் பயிற்சிகள் போன்று குறைந்த அளவில் இளந் தொண்டர்களுக்கும் பயிற்சி யளிக்கப்படுகிறது. இவர்களது பயிற்சி பெரும்பாலும் பாட்டுக்கள், விளையாட்டுக்கள், கதைகள் ஆகியவற்றின் மூலமாகவே இருக்கும். ஆயினும் இவர்களும் தம்மால் முடிந்த அளவு பிறருக்கு உதவக்கூடிய நிலைக்குத் தயா ராக்கப்படுகிறார்கள். இதே போன்று பெண்களின் தொண் டர் படைகளும் சில இடங்களில் உண்டு.

நீ தொண்டர் படையில் சேர விரும்புகிறாயா ?

## பயிற்சி

**1. விடை எழுது :**

1. தொண்டர் படையினரின் குறிக்கோள் என்ன? அவர் களின் கொள்கைகள் யாவை ?

2. தொண்டர் படையில் தொண்டர்களுக்கு என்னென்ன கற்பிக்கப்படுகின்றன ?

3. தொண்டர்கள் அடிக்கடி ஏன் இன்பச் செலவு செல் கிறார்கள்.

4. இளந்தொண்டர்கள் என்பவர் யார் ?

5. இளந் தொண்டர்களுக்கு எவ்வாறு பயிற்சி அளிக்கப் படுகிறது ?

**2. கீழுள்ள சொற்களைத் தொடர்களில் அமைத்து எழுது :**

குறிக்கோள், உளப் பண்பு, நற்பணி, உடலுரம், இவற்றிற்கான, பலதிறப்பட்ட, வயதுக்கேற்ப, முடிந்த அளவு.

**3.** ஒரு தொடரிலுள்ள எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் ஆகியவற்றை அறிவது எப்படி என்று முன் வகுப்பில் அறிந்திருக்கிறீர்களல்லவா? கீழுள்ள தொடர் களுக்கு எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் கூறுங்கள் :

1. பிள்ளைகளே ! நீங்கள் இச்சிறுவர்களைப் பாருங்கள்.

2. இவர்கள் கழுத்தில் ஒரு துணியைக் கட்டியிருக்கிறார்கள்.

3. இவர்கள் மக்களுக்குத் தேவையான உதவிகளைச் செய்வார்கள்.

4. ஆசிரியர்கள் இவர்களுக்கு வேண்டிய நல்ல பயிற்சிகளைத் தருகிறார்கள்.

5. நீ இத்தகைய தொண்டனைப் பார்த்திருக்கிறாயா ?

4. ‘இவர்கள் ஆண்டவனுக்கும், அரசுக்கும், மக்களுக்கும் கடமைப்பட்டவர்கள் ; பிறருக்கு எப்போதும் தொண்டு புரிவார்கள் ; இயக்கத்தின் சட்டதிட்டங்களுக்கு அடங்கி நடப்பார்கள். மேற்காணும் தொடரில் ( ; ) இவ்வாறு இடப்பட்டுள்ள குறிக்கு **அரைப்புள்ளி** என்று பெயர்.

ஒரே எழுவாய்க்குப் பல பயனிலைகள் வந்தால், அவ்வாறு வரும் ஒவ்வொரு பயனிலைக்கும் அரைப்புள்ளி இட்டுக் கடைசிப் பயனிலைக்கு முற்றுப்புள்ளி இடவேண்டும்.

இதுவரை நீங்கள் முற்றுப்புள்ளி, அரைப்புள்ளி, காற்புள்ளி, வினாக்குறி, வியப்புக்குறி, மேற்கோள்குறி ஆகியவற்றை அறிந்திருக்கிறீர்கள். இவையனைத்திற்கும் சேர்த்து **நிறுத்தற் குறிகள்** என்று பெயர். நீங்கள் பாடங்களைப் படிக்கும்போது நிறுத்தற் குறிகளைக் கவனித்து, அவற்றிற் கேற்றபடி நிறுத்திப் படிக்க வேண்டும் ; எழுதும்போதும் நிறுத்தற் குறிகளை இட்டு எழுதப் பழக வேண்டும்.

# 18. ஆய்

நாம் உலகில் இன்பமாக வாழவேண்டுமானுல் அதற்குப் பொருள் வேண்டும். பொருள் இல்லாதவருக்கு இவ்வுலக இன்பமே இல்லை என்கிருர் திருவள்ளுவர். வாழ்க்கைக்கு இன்றியமையாததாகிய செல்வம் எல்லோருக்கும் வேண்டிய அளவு கிடைப்பதில்லை. சிலர் தம் ஓயா உழைப்பாலும், அறிவுத் திறனுலும், பிற வகையாலும் மிக்க செல்வத்தைப் பெறுகின்றனர். அவ்வாறு பொருளை மிகுதியாக ஈட்டியவர்கள் அதனைக் கொண்டு தாமும், தம்மைச் சேர்ந்தவர்களும் இன்புறுவதோடு நின்றுவிடக் கூடாது. தம்மிடம் குவிந்துள்ள அச்செல்வத்திற்குரியோர் வேறு பலர் இருக்கின்றனர் என்பதை அவர்கள் உணர வேண்டும். உணர்ந்து அதைக்கொண்டு மற்றவர்களுக்கும் உதவ முன்வரவேண்டும்.

இச்சீரிய கொள்கையை மேற்கொண்டு வாழ்ந்த பலர் பண்டைத் தமிழகத்தில் இருந்தனர். அவர்கள் தம்மிடமிருந்த பொருள்களைத் தக்கவர்களுக்கெல்லாம் கொடுத்து உதவினர். அத்தகையவர்களுக்கு "வள்ளல்கள்" என்னும் பட்டத்தைச் சூட்டி மகிழ்ந்தது தமிழ் நாடு. அவ்வள்ளல்களில் ஒருவனுகிய ஆய் என்பவனைப் பற்றிய சில செய்திகளை இப்பாடத்தில் தெரிந்து கொள்ளலாம்.

இவனது முழுப்பெயர் ஆய் அண்டிரன் என்பதாகும். இவன் தென்றல் தவழும் பொதிய மலைக்குத் தலைவன் ஆவான். ஆய்குடி என்பது இவன் வாழ்ந்த ஊரின் பெயராகும். இவன் தமிழ் நாட்டு மூவேந்தராலும் பாராட்டப் பெற்று 'வேள்' என்னும் சிறப்புப் பெயருக்கும் உரியவனுன். பயன் கருதாது ஈந்து வாழ்ந்த இவ்வள்ளல் கொடையிலும், வீரத்திலும் சிறந்து விளங்கினுன்.

வள்ளல் ஆயிடம் யானைகள் மிகுதியாக இருந்தன. "யானை இருந்தாலும் ஆயிரம் பொன், இறந்தாலும் ஆயிரம் பொன்" அல்லவா? ஆதலால் தன்னிடம் பொருள் வேண்டி வந்த புலவர்கட்கும், மற்றவர்கட்கும் இவன் யானைகளையே பரிசாகக் கொடுப்பது வழக்கம். எண்

ணற்ற யானைகளை வழங்கிய இவனது செயலைக் கண்டு வியந்த புலவர் ஒருவர் இவன் இவ்வளவு யானைகளைப் பரிசாக வழங்குகின்றானே "இவனது நாட்டில் பெண் யானைகள் ஒரு முறைக்குப் பத்துக் கன்றுகளை ஈனுகின்றனவா?" என்கிறார். மற்றொருவர் எண்ணற்ற யானைகள் வாழும் காடு ஒன்றைக் கண்டு "இக்காடும் ஆய் வள்ளலைப் புகழ்ந்து பாடிற்று போலும். இவைகள் அவன் பரிசாகத் தந்த யானைகளோ?" என்று வியந்து பாராட்டுகிறார்.

இக் கொடைப் பண்பு இவனுக்கு மட்டுமே உரியதன்று. அது இவனது குடும்பச் சொத்தாகும். அதாவது இவனது பரம்பரையைச் சேர்ந்த அனைவரும் அப்பண்புடையவர்களாகவே விளங்கினர். ஆயின் குடும்பத்திற்கு ஈடாக இமயமலையைத் தவிர வேறு எதனையும் சொல்ல முடியாது. "வடக்கே வானளாவிய இமயமலை இருக்கிறது. தெற்கே ஆய்குடி இருக்கிறது. இக்குடி இங்கு இல்லையாயின் இமயமலையின் சுமையினால் வண்டி குடைசாய்வது போல் இவ்வுலகமும் கீழ் மேலாகக் கவிழ்ந்துவிடும்" என்று ஒரு புலவர் பாராட்டியுள்ளார்.

ஆயைப் போன்ற வள்ளல்கள் பலர் தமிழ் நாட்டில் இருந்தனர். ஆனால் இவனது கொடைக்கும் பிறரது கொடைக்கும் அடிப்படையில் ஒரு வேறுபாடு உண்டு. மற்ற வள்ளல்களும் கைம்மாறு கருதாதுதான் கொடுத்தனர். ஆயினும், அவர்கள் மறுபிறப்பில் தாம் அடைய விரும்பும் இன்பம், புகழ், அறம் முதலிய பயன்களையேனும் கருதியிருப்பர். ஆனால் ஆய் அத்தகைய பயன் எதையுமே கருதாமல் வழங்கி வந்தான் என்று தெரிகின்றது. மேலும், "இப்பிறப்பில் நாம் செய்யும் அறம் மறுபிறப்பில் நம்மை வந்து அடையும் என்பது போன்ற எதனையாவது எண்ணிக் கொடுப்பது கொடையாகாது; அது அறத்தை விலைக்கு விற்கும் ஒருவகை வாணிபமேயாகும்" என்பதும் இவனது கருத்தாகும்.

இறுதியாக இவனது வீரத்தைப் பற்றியும் சிறிது தெரிந்து கொள்ளலாம். "கரிய முகில்கள் தவழ்ந்து

விளையாடிக் கொண்டிருக்கும் இவனது பொதிய மலையை ஆடிப் பாடிப் பரிசுபெறும் விறலியர் போன்ற பரிசிலர் நெருங்கலாமே தவிர பேரரசர் யாரும் போர் நோக்குடன் அணுக முடியாது'' என்னும் கருத்து இவனது வீரத் திற்கே சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றது.

### பயிற்சி

**விடை எழுது :**

1. பொருளை ஈட்டியவர்கள் எதனை உணர வேண்டும்?
2. ஆய் வள்ளலின் கொடைச் சிறப்பைப் பற்றி பதினைந்து வரிகள் எழுது.
3. ஆயின் குடிப் பெருமையைப் பற்றிய கருத்து யாது?
4. கொடையைப் பற்றி ஆய்வள்ளலின் கருத்து யாது?
5. ஆயின் வீரத்திற்குரிய சான்று எது?

# 19. உழைப்பால் உயர்ந்தோர்

பிள்ளைகளே ! மின்சார விளக்கின் உதவியினல் நாம் நல்ல வெளிச்சத்தைப் பெறுகிறோம்; கிராமபோன் மூலம் பாட்டுக்களைக் கேட்கிறோம்; ஒலிப்பெருக்கி மூலம் கூட்டங்களில் தொலைவில் பேசப்படும் பேச்சுக்களையும் தெளிவாகக் கேட்கிறோம். படக் காட்சியைக் கண்டு



களிக்கிறோம். இக்கருவிகளை நமக்குக் கண்டுபிடித்துத் தந்தவர் யார் என்று நீங்கள் நினைத்துப் பார்த்திருக்கிறீர்களா? அவர்தான் **தாமஸ் ஆல்வா எடிசன்** என்பவர். அவர் அமெரிக்க நாட்டில் மிகவும் ஏழைக் குடும்பம் ஒன்றில் பிறந்தவர். தமது சலியா உழைப்பால் பல அரிய பொருள்களைக் கண்டுபிடித்து உலகுக்குத் தந்துள்ளார்.

எடிசன் சிறு வயதில் ஒரு பெரிய போக்கிரியாய் இருந்தார். பள்ளிப் படிப்பில் சிறிதும் கவனம் செலுத்தாமல்

எப்போதும் கேலிப் படங்கள் வரைவதும், பிறருக்குத் தொல்லை கொடுப்பதுமாகவே இருந்தார். எனவே அவரது பெற்றோர் அவரைப் பள்ளியிலிருந்து நிறுத்திவிட்டனர். அவரது தாயாரே அவருக்கு ஆசிரியரானார். அவர் தம் அருமை மகனுக்கு வீரர்களின் வரலாறுகளையும், வீரச் செயல்களையும் கற்பித்தார். இவ்வரலாறுகள் எடிசனது இளமை யுள்ளத்தில் ஆழப் பதிந்தன. நாட்டுப் பற்றும், இனப்பற்றும், பிறர்க்குத் தொண்டு புரியும் மனப்பான் மையும், உழைப்பே உயர்வளிக்கும் என்னும் உண்மையும் அவர் உள்ளத்தே வளர்ந்தன. நன்றாய்ப் படிக்க வேண் டும், உழைத்து உயர்வு பெறவேண்டும் என்ற ஊக்கமும் அவர் உள்ளத்தில் எழுந்தது.

எடிசன் ஏழ்மை நிரம்பிய குடியில் பிறந்து, ஏழ்மைச் சூழ்நிலையிலேயே வளர்ந்தார் அல்லவா? அவர் தம் பெற் றோர் ஏழ்மையினால் துயருறுவதைக் கண்டு எப்படியாவது அவர்களுக்கு உதவ வேண்டுமென்று எண்ணினார். தம் வீட்டுச் சிறு தோட்டத்தில் காய்கறிகளைப் பயிரிட்டு விற் றார். அதன் மூலம் கிடைத்த தொகையில் பாதியைத் தம் பெற்றோருக்குக் கொடுத்து, மீதியில் அறிவியல் நூல்களை வாங்கிப் படித்தார்.

சிறிது காலத்திற்குப் பின்னர், எடிசன் புகைவண்டி நிலையம் ஒன்றில் செய்தித்தாள் விற்கும் வேலையில் அமர்ந் தார். அதிலிருந்து கிடைக்கும் சிறு வருவாயிலும் மிகச் சிறு தொகையைச் சேர்த்து வைத்தார். செய்தித்தாள் ஒன்றினைத் தாமே வெளியிட வேண்டுமென்னும் அவா அவருக்கு எழலாயிற்று. எனவே, தாம் சேர்த்த பொருளைக் கொண்டு, புகைவண்டியின் அறை யொன்றில் சொந்த மாக ஓர் அச்சகம் அமைத்துக்கொண்டார். அவரே செய் தித்தாளுக்கு வேண்டிய செய்திகளை எல்லாம் எழுதினார்; அவைகளைத் தாமே அச்சுக் கோர்த்து அச்சிட்டார்; அது மட்டுமன்றி அச்செய்தித் தாள்களைத் தாமே விற்றார். இங்ஙனம் சலியா உழைப்பால் தம் பத்திரிகையைச் சிறந்த முறையில் நடத்தி வந்தபோது அவருக்கு வயது பதின்மூன்றுதான். பிள்ளைகளே! இளம் வயதிலேயே

அவரது உழைப்பின் திறனைக் கவனித்தீர்களா? உழைப்பு இன்றேல் உலகில் உயர்வும் இல்லை, புகழும் இல்லை என்பதே அவரது கருத்து. உலகில் பயன் தரத்தக்க புதுப் புதுக் கருவிகளைக் கண்டுபிடிக்க வேண்டுமென்னும் ஆர்வமும் அவருக்கிருந்தது. எனவே, செய்தித்தாள் வெளியிடும் காலத்திலேயே பல ஆராய்ச்சிகளையும் செய்து வந்தார்.

ஒரு சமயம் எடிசன், புகைவண்டி நிலையத்து அதிகாரி ஒருவரிடம் தந்தியடிக்கும் கலையைக் கற்ருர். பின்னர், அவர் பல தந்தி நிலையங்களில் வேலை செய்தார்; தம் ஒய்வு நேரத்தில் இரசாயன ஆராய்ச்சிகளையும் தொடர்ந்து நடத்திவந்தார். சிறிதும் சோர்வுருமல் சிற்றெறும்புபோல் ஏதேனும் தொழிலில் ஈடுபட்டுக்கொண்டே இருந்தார். இவ்வராய்ச்சிகளின் பயனுகத் தங்கத்தின் விலையில் ஏற்றத்தாழ்வுகளைக் கணக்கிடக் கூடிய ஓர் அருமையான கருவியைக் கண்டுபிடித்தார். அதனை நாற்பதினுயிரம் டாலருக்கு (அமெரிக்க நாணயம்) விற்ருர்.

இளம் வயதில் ஏழையாயிருந்து வருந்திய எடிசன் பெரும்பொருள் பெற்றதும் சோம்பித் திரியத் தொடங்கவில்லை. தாம் பெற்ற தொகையைக் கொண்டு புதுத் தொழிற்சாலை யொன்றை நிறுவினுர். இரவு பகலாகப் புதுப்புதுக் கருவிகள் கண்டு பிடிப்பதில் ஈடுபட்டார். ஒரே கம்பியில் பல செய்திகளை அனுப்பும் முறையைக் கண்டுபிடித்தார்; ஓடும் இரயில் வண்டிகளுக்குத் தந்தி அனுப்பும் வகையைக் கண்டார்; இரயில் வண்டிகளை மின்சாரத்தின் மூலம் ஓடச் செய்தார்; ஒலிபெருக்கி, கிராமபோன், மின்சார விளக்கு, பேசும் படக்காட்சி போன்றவற்றையும் இவரே கண்டு பிடித்தார். இங்ஙனம் எடிசன் தம் வாழ்நாள் முழுதும் பல அரிய பொருள்களைக் கண்டு பிடிப்பதிலேயே ஈடுபட்டார். அவர் தமது 84-வது வயதில் காலமானுர்.

பிள்ளைகளே! உங்கள் வீட்டில் மின்சார விளக்கு எரியும்போதெல்லாம் தாமஸ் ஆல்வா எடிசனைப்பற்றி நினையுங்கள். கிராமபோன் மூலம் பாட்டுக்களைக் கேட்கும்

போதெல்லாம் அவரைப்பற்றி எண்ணுங்கள். உழைப்பால் உயர்ந்த அவரைப்போல் நீங்கள் ஒவ்வொருவரும் உழைத்து முன்னுக்கு வரப் பாடுபடுங்கள்.

## பயிற்சி

**1.** விடை எழுது :

1. எடிசன் தமது சிறு வயதிலேயே உழைப்பின் உயர்வை உணர்ந்தவர் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு கூறு.

2. எடிசன் தமது பதின்மூன்றும் வயதில் நடத்திய தொழில் யாது ?

3. எடிசன் கண்டுபிடித்த சில கருவிகளைக் கூறு.

4. எடிசனைப் பற்றி உனது சொந்தத் தொடர்களில் 15 வரிகள் எழுது.

**2. கீழுள்ள சொற்களைத் தொடர்களில் அமைத்து எழுது :**

சலியா உழைப்பு, துயருறுவது, அவா எழலாயிற்று, அது மட்டுமின்றி, பயன் தரத்தக்க, ஈடுபட்டு.

**3. எதிர்ச்சொற்கள் எழுது :**

அரிய, பிறந்தார், தொல்லை, இளமை, பதிந்தன, ஊக்கம், ஏழை, புகழ்.

**4.** தடித்த எழுத்திலுள்ள சொற்களுக்குப் பதில் அதே பொருள் தரும் வேறு சொற்களை எழுது :

1. படக்காட்சியைக் **கண்டு களிக்கிறோம்.**
2. **அன்னையார் வீரர்களின் வரலாறுகளைக்** கற்பித்தார்.
3. **உழைத்து** உயர்வு **பெற விரும்பினர்.**
4. பெற்றோர் **ஏழ்மையில் துன்புறுவதைக் கண்டார்.**
5. செய்தித்தாள் விற்கும் **வேலையில்** அமர்ந்தார்.

# 20. முயலின் வெற்றி

யானை எவ்வளவு வலிமையுள்ளதென்று உங்களுக்குத் தெரியும். பெரிய பெரிய மரங்களைத் தூக்கும்; உறுதி யான கோட்டைகளையும் இடித்துத் தூள் தூளாக்கிவிடும். இத்தகைய யானைகளின் கூட்டம் ஒன்றை, ஒரு முயல் தன் நுண்ணிய அறிவால் அஞ்சி ஓடும்படி செய்தது. அஃதெப்படி என்பதைக் கீழுள்ள கதையைப் படித்து அறிந்துகொள்ளுங்கள்.

ஒரு மலைக் காட்டில் பல யானைகள் வாழ்ந்து வந்தன. ஒரு சமயம் அங்கு மழையே பெய்யவில்லை. ஆறு, ஓடை, குளம் முதலிய எல்லா நீர் நிலைகளும் வறண்டுவிட்டன. குடிநீர் கிடைக்காமல் யானைகள் மிகவும் திண்டாடின. சில யானைகள் நீர் வேட்கையால் இறந்தும் போயின. ஒரு நாள் எல்லா யானைகளும் கூடி என்ன செய்யலாம் என்று யோசித்தன. நெடுநேரம் யோசனை செய்த பிறகு அக்காட்டை விட்டு வெளியேறி, நீருள்ள வேறோர் இடத் திற்குச் சென்று குடியேறுவது என்று முடிவு செய்தன.

பின்னர் அவை பல நாட்கள் நடந்து நெடுந்தொலைவி லுள்ள ஒரு புதிய காட்டை அடைந்தன. அங்கே என்றும் வற்றாத ஒரு பெரிய சுனை இருந்தது. அதைக் கண்ட யானைகள் மகிழ்ச்சிப் பெருக்கால் தலைகால் தெரியாமல் துள்ளின. நீரில் இறங்கி அன்று மாலைவரையில் விளை யாடின. அச்சுனையின் சுற்றுப்புறத்தில் வாழ்ந்த முயல் களில் பல, யானைகள் குதித்துக் கும்மாளம் போட்டபோது அவற்றின் கால்களில் சிக்குண்டு இறந்தன. சில காலொடிந்தும், வாலறுந்தும் வருந்தின. பிழைத்த முயல் கள் அனைத்தும் மூலைக்கொன்றாய் ஓடின.

பிறகு, அவை யாவும் ஒன்றுகூடி யானைகளை எவ்வாறு அங்கிருந்து விரட்டலாம் என்று எண்ணலாயின. ஒவ் வொரு முயலும் ஒவ்வொரு திட்டத்தைக் கூறிற்று. ஆனால் அத்திட்டங்களில் எதுவும் பொருத்தமானதாக இல்லை. கடைசியில் ஒரு கிழமுயல் எழுந்து “நான் எப்படியாவது யானைகளையெல்லாம் நம் காட்டிலிருந்து

ஓட்டிவிடுகிறேன். அதுவரையில் நீங்கள் எங்காவது சென்று பதுங்கியிருங்கள்,'' என்று கூறிவிட்டு யானைகள் வரும் வழியில் இருந்த ஒரு மேட்டில் ஏறி உட்கார்ந் திருந்தது.

யானைகள் எங்கோ சென்று மோய்ந்துவிட்டுச் சுனையை நோக்கி வந்துகொண்டிருந்தன. யானைகள், தான் இருந்த மேட்டிற்கு அருகில் வந்ததும், முயல் அவை களைப் பார்த்து, "ஓ, அறிவுகெட்ட யானைகளே, உங்க ளுக்கு எவ்வளவு கொழுப்பு இருந்தால் இங்கு வந்து இப்படித் தலைகால் தெரியாமல் விளையாடுவீர்கள். உங்களையெல்லாம் நான் அடித்துக் கொல்லப்போகி றேன்'' என்றது. அதைக் கேட்ட யானைகளின் தலைவன்



கேலியாகச் சிரித்துவிட்டு முயலைப் பார்த்து, "நீ யார்?'' என்று கேட்டது.

"நான் சந்திரமண்டலத்திலிருந்து வருகிறேன். எங்கள் அரசர் என்னை உங்களிடம் தூதாக அனுப்பினர்.

நீங்கள் இங்கு வந்து விளையாடுவதால் நாள்தோறும் பல முயல்கள் இறக்கின்றன. ஆதலால் நீங்கள் இப்போதே இங்கிருந்து ஓடிவிடவேண்டும். இல்லாவிட்டால் எங்கள் அரசர் உங்களையெல்லாம் கொன்றுவிடுவதாகச் சொல்லி வரச் சொன்னார்'' என்று அக் கிழமுயல் கூறியதும், யானைகள் நடுங்கிவிட்டன; பெரிய இடத்திலிருந்து வரும் தூதன் என்று கருதி அக் கிழமுயலுக்கு வணக்கம் செய்தன.

அரச யானை முயலை வணங்கிவிட்டு, ''சந்திரனின் தூதரே! நான் உங்கள் அரசரைப் பார்த்து வணங்கி மன்னிப்புக் கேட்டுக்கொண்டு இவ்விடத்தைவிட்டு என் கூட்டத்தோடு ஓடிவிடுகிறேன். ஆகையினால் என்னை உங்கள் அரசரிடம் அழைத்துச் செல்வீரா?'' என்று கேட்டது. முயல் சிறிது யோசித்துவிட்டு, ''எங்கள் அரசரும் இப்போது இக்காட்டுக்கு அருகில் வந்திருக்கிறார். நீ மட்டும் வா,'' எனக் கூறி அரச யானையை அழைத்துச் சென்றது.

அருகில் இருந்த ஒரு குளத்தில் வானத்தில் இருந்த நிலவின் வடிவம் தெரிந்தது. முயல் அதை யானைக்குக் காட்டி, ''இதோ எங்கள் அரசர் தவம் செய்துகொண்டிருக்கிறார். அவரை இப்போது தொந்தரவு செய்தால் அவருக்கு மிகுந்த கோபம் வரும். ஆகையால் இங்கிருந்தபடியே அவரைப் பார்த்து வணங்கிவிட்டு ஓடிவிடு. நான் அவரிடம் சொல்லி உங்கள் அனைவரையும் மன்னிக்கச் சொல்கிறேன்,'' என்றது. குளத்தில் தெரிந்த நிலவின் நிழலை உண்மை நிலவு என்று நம்பிய யானையும் அதற்கு ஒரு கும்பிடு, அதன் தூதனாகிய கிழமுயலுக்கு ஒரு கும்பிடு என்று இரண்டு கும்பிடுகள் போட்டுவிட்டுத் திரும்பிப் பார்க்காமல் ஓடித் தன் கூட்டத்தையும் அழைத்துக் கொண்டு வேறொரு காட்டிற்குச் சென்றுவிட்டது.

கிழமுயலின் அறிவுக் கூர்மையால் எல்லா முயல்களும் அன்றுமுதல் அச்சமின்றி அக்காட்டில் இன்பமாக வாழ்ந்தன. அறிவு இருந்தால் ஆகாததும் உண்டோ?

## பயிற்சி

**1. விடை எழுது :**

1. யானைகள் ஏன் வேறு காட்டிற்குச் சென்றன ?

2. யானைகளால் முயல்களுக்கு ஏற்பட்ட தொந்தரவு யாது ?

3. யானைகளை விரட்டக் கிழ முயல் என்ன தந்திரம் செய்தது ?

4. அரச யானை எவ்வாறு ஏமாந்தது ?

5. இரண்டாவது காட்டைவிட்டு யானைகள் ஏன் சென்று விட்டன ?

**2. கீழுள்ள சொற்களைத் தொடர்களில் அமைத்து எழுது :**

நுண்ணிய, நெடுந்தொலைவு, மகிழ்ச்சிப்பெருக்கு, தலைகால் தெரியாமல், சுற்றுப்புறத்தில், மூலைக்கொன்றாய், பொருத்த மானதாக, அறிவுக்கூர்மை.

**3. எச்சத் தொடர்களை முற்றுத் தொடர்களாக்கு :**

1. யானை தன் தந்தங்களால் .........
2. யானைகள் எல்லாம் ஒருநாள் .........
3. முயல்கள் அனைத்தும் ஒன்றுகூடி .........
4. கிழ முயலின் பேச்சைக் கேட்டு .........
5. சந்திரனின் நிழலைக் கண்ட யானை .........

**4. கீழுள்ள கட்டங்களில் உள்ள வெற்றிடங்களை நிரப்பு :**

| | இறந்த காலம் | நிகழ் காலம் | எதிர் காலம் |
|---|---|---|---|
| 1 | தெரிந்தது | ...... | ...... |
| 2 | ...... | வருகிறேன் | ...... |
| 3 | ...... | ...... | செல்வீரா |
| 4 | வந்தன | ...... | ...... |
| 5 | ...... | ...... | ஓடுவேன் |

# 21. நீலகிரி



தென்னிந்தியாவில் மேற்குத் தொடர்ச்சி மலையும், கிழக்குத் தொடர்ச்சி மலையும் கூடுமிடத்தில் நீலகிரி என்னும் மலை உள்ளது. இம் மலைமீதுள்ள நிலப்பரப்பே நீலகிரி மாவட்டம் ஆகும். இம் மாவட்டத்திலுள்ள நகரங்களுள் ஒன்று உதகை மண்டலம். இது, கடல் மட்டத்திற்குமேல் சுமார் ஏழாயிரம் அடி உயரத்தில் இருக்கிறது.

உதகை மண்டலம் ஓர் உடல் நலம் பேணும் இடமாகப் பயன் படுத்தப்பட்டு வருகின்றது. கோடைக் காலத்தில் மக்கள் வாழ்வதற்கேற்ற சோலையூர் என இதனைக் கூறலாம். துதவர் என்னும் பழங்குடி மக்களே இங்கு பண்டைக்காலத்தில் வாழ்ந்து வந்தனர். பலரும் வசதிகளுடன் சென்று தங்குவதற்கேற்ற வகையில் சாலைகளும், அரண்மனைகளும், பிற வசதிகளும் ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் இவ்வூரில் ஏற்படுத்தப்பட்டன.

இவ்வூரை அடைதற்கு மேட்டுப்பாளையம் புகை வண்டி நிலையத்திலிருந்து மலைமேல் சுமார் முப்பது கல் செல்லவேண்டும். இத் தொலைவினை மோட்டார் மூல

மாகவோ, புகைவண்டி மூலமாகவோ கடந்து செல்லலாம். இருப்புப்பாதையில் சாதாரணமாக உள்ள இருவரிசைத் தண்டவாளங்களுடன், பற்கள் பொருந்திய ஒரு தண்டவாளமும் நடுவே உள்ளது. வண்டியின் இரு சக்கரங்கள் இரு தண்டவாளங்களின் மீதும், பற்களுள்ள மற்றொரு சக்கரம் இடையேயுள்ள பல் தண்டவாளத்தின் மீதும் பொருந்தி வண்டி ஓடும். இத்தகைய ஏற்பாட்டினுல் புகைவண்டி மேல் நோக்கி ஏறும்போது நழுவாமல் இருக்கும்.

மோட்டார் செல்லும் சாலைகள் பெண்கள் தம் தலையில் செருகும் கொண்டை ஊசியைப் போல் வளைந்து வளைந்து காணப்படும். அடிவார ஏற்றத்திலிருந்தே வேகத்தை மட்டுப்படுத்தவும், சாலைத் திருப்பங்களை உணர்த்தவுமான அறிவிப்புப் பலகைகள் சாலை ஓரங்களில் ஆங்காங்கே செந்நிறத்தில் அமைக்கப்பட்டுள்ள. வழி முழுவதும் சாலையோரங்களில் இயற்கைவளம் மிக்க சோலைகளைக் காணலாம்.

அடிவாரத்திலிருந்து மேலே செல்லும் வழியில் சுமார் ஐயாயிரம் அடி உயரத்தில் குன்னூர் என்னும் நகரம் உள்ளது. இவ்வூரினைக் கடந்தே உதகை மண்டலம் செல்ல வேண்டும். குன்றூர் என்பதே மருவிக் குன்னூர் என்று வழங்குகிறது போலும். குன்னூரை யடுத்தவுடனேயே, குளிர்ந்த உணர்ச்சி யுண்டாகிக் கம்பளி உடை அணிவதற்கான வேட்கை தோன்றும். குன்னூரில் ‘சிம்ஸ் பார்க்’ என்ற பூங்கா காணத்தக்க இடமாகும். குன்னூரில், நாய்க்கடி முறிவுக்கான மருந்து தயாரிக்கும் ‘பாஸ்டர் இன்ஸ்டிடியூட்’ இருக்கிறது; பட்டுப் புழுக்களை வளர்த்துப் பட்டுநூல் உற்பத்தி செய்யும் நிலையமும், உணவு ஆராய்ச்சி நிலையமும் இங்குள்ளன.

குன்னூரை அடுத்து உள்ளது ‘வெலிங்டன்’ என்னும் ஊராகும். இங்கு படைவீரர் தங்கும் இல்லங்கள் உள்ளன. இதற்கு அடுத்து உள்ளது அருவங்காடு என்னும் ஊர். இங்கு போர்ப் படையினருக்குத் தேவையான வெடிமருந்து தயாரிப்புச் சாலை உள்ளது. இவ்வூர்

களைக் கடந்து மேலும் சென்ருல் உதகை மண்டலத்தை அடையலாம்.

உதகை மண்டலம் ஒரு மலை நகரமாதலின் ஆங்காங்குப் பற்பல இடங்கட்கும் மேட்டிலும், பள்ளத்திலும் ஏறியும், இறங்கியும் செல்லவேண்டி யிருக்கும். கட்டடங்கள் தூரப் பார்வைக்குப் படிக்கட்டுகளில் வரிசை வரிசையாகக் கொலு வைத்துள்ளவைபோல் காட்சியளிக்கும். மலைச் சரிவுகளில் கோஸ், தக்காளி, பீட்ரூட், சீமை முள்ளங்கி போன்ற காய்கறிகள் பயிரிடப்படுகின்றன. நீலகிரித் தைலம் என்ற ஒருவகை எண்ணெய் இறக்குவதற்கான இலைகளையுடைய யூகலிப்டஸ் மரங்கள் இம் மலைப்பகுதியில் மிகுதியும் உண்டு. உருளைக்கிழங்கு உற்பத்தியும் இங்கு அதிகம்.

உதகை மண்டலத்தில் ஏரி, பூங்கா ஆகியவை பார்க்கத்தக்க இடங்களாகும். இங்குள்ள ஏரி, இயற்கையாய் அமைந்துள்ள ஒரு நீர் நிலையாகும். பூங்கா மிக அழகிய முறையில் வைத்து வளர்க்கப்பட்டு வருகின்றது. பல மேனுட்டு மரங்களையும், செடிகளையும் இப் பூங்காவில் காணலாம். வண்ண மலர்கள் பல சிறந்த தோற்றங்களுடன் இங்கு காட்சியளிக்கின்றன. ஆனுல் அவை ஒன்றிலும் மணம் இருக்காது. இப் பூங்காவில் கோடைக் காலத்தில் ஆண்டுக்கொரு நாள் மலர்க் காட்சி நடத்தப்படுகிறது. சென்னை மாநில ஆளுநர் (கவர்னர்) தங்குவதற்கான அரண்மனை யொன்றும் பூங்காவின் ஒரு புறம் உள்ளது.

ஒரு முறையேனும் உதகை மண்டலம் சென்று அவ்விடத்தின் இயற்கைக் காட்சிகளைக் கண்டு தட்ப வெப்ப நிலையினை உணர்ந்து வருவது பெரிதும் இன்பம் பயப்பதாகும்.

## பயிற்சி

**1. விடை எழுது :**

1. நீலகிரி மலை எங்குள்ளது?

2. நீலகிரி மலைமீது புகைவண்டி செல்லும்போது நழுவாமலிருக்க என்ன ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது?

3. உதகை மண்டலத்திற்குப் போகும் வழியில் உள்ள ஊர்களில் சில கூறு.

4. குன்னூரில் காணத்தக்க இடங்கள் யாவை?

5. உதகை மண்டலத்தைப்பற்றிப் பத்து வரிகள் எழுது.

**2. கீழுள்ள சொற்களைத் தொடர்களில் அமைத்து எழுது :**

பண்டைக் காலம், மட்டுப்படுத்த, உணர்ச்சி, பார்க்கத்தக்க, இயற்கையாய், பயப்பதாகும்.

**3. எதிர்ச் சொற்கள் எழுது :**

வளைந்து, ஏற்றம், மட்டுப்படுத்த, வேட்கை, மேடு.

**4. பிரித்து எழுது :**

தென்னிந்தியாவில், கூடுமிடத்தில், மலைமீதுள்ள, ஏழாயிரம், வாழ்வதற்கேற்ற, ஐயாயிரம், பற்பல.

# 22. மருத்துவ மனை

**தம்பி :** அண்ணு, இந்த பத்திரிகைச் செய்தியைப் பார்த்தீர்களா? காவனூரில் ஒரு புதிய மருத்துவ மனை திறந்துள்ளார்களாம். இப்போதெல்லாம் அடிக்கடி புதுப் புது மருத்துவ மனைகள் திறக்கப்படுகின்றன போலும்!

**அண்ணன் :** ஆம் தம்பி, மக்களுக்கு மருத்துவ உதவி யளிக்க வேண்டியது அவசியமல்லவா? அதனுல் தான் அரசினர் ஆங்காங்கு மருத்துவ மனைகளைத் தொடங்குகின்றனர்.

**தம்பி :** 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்று நான் படித்திருக்கிறேன். அதன்படி நோய் இல்லாமல் இருப்பதல்லவா நல்லது?

**அண்ணன் :** ஆமாம்! அதுதான் சிறந்தது. ஆனுல் உணவில் ஏற்படும் குறைகளினுலோ, தூய்மைக் கேட்டினுலோ சில சமயம் மக்களுக்கு நோய் ஏற்பட்டு விடுகிறது. அப்பொழுது அதை மேலும் வளரவிடாமல் தடுத்துக் குணப்படுத்த மருத்துவ மனைகள் தேவையல்லவா?

**தம்பி :** மருத்துவ மனைகளில் எல்லாவித நோய்களுக்கும் மருத்துவம் செய்வார்களா?

**அண்ணன் :** பொதுவாக எல்லா நோய்களுக்கும் மருத்துவ மனையில் மருந்து கொடுப்பார்கள். ஆயினும், காசம், குட்டம், அம்மை, காலரா போன்ற தொத்து நோய்களுக்கென தனிப்பட்ட மருத்துவ மனைகளும் உள்ளன. இவை தவிர, குழந்தைப் பேறு மனைகளும், கண் மருத்துவ மனைகளும் தனித்தனியாக உள்ளன.

**தம்பி :** நோயாளிகளின் தேவைகளை யெல்லாம் மருத்துவர்கள் தானே கவனிக்கவேண்டும்?

**அண்ணன் :** அப்படியல்ல. நோயாளிகளைக் கவனித்து மருந்து கொடுப்பதும், வேறு சிகிச்சைகள் செய்வதும் மருத்துவரின் வேலை. இவர்களைத் தவிர,

மருத்துவ மனையில் வேறு பல வேலையாட்களும் இருப்பர். நோயாளிகள் உள்ள இடமாதலால் மருத்துவ மனை மிகச் சுத்தமாக இருக்கவேண்டு மல்லவா? அதைக் கவனிக்கவும், நோயாளிகளுக்கு வேண்டிய உணவு வகைகளைத் தயாரித்துத் தரவும்,



மற்றும் வேறு பல வேலைகளுக்கும் ஆட்கள் பலர் உண்டு. இவர்கள் தவிர நோயாளிகளைக் கவனித்து வேளை தவறாமல் மருந்து தரவும், அவர்களுக்குத் தேவையான பிறவற்றைக் கவனிக்கவும் தாதிமார் களும் இருக்கின்றனர்.

தம்பி: நர்சுகளைத் தானே குறிப்பிடுகிறீர்கள்? எங்கள் வகுப்பு ஆசிரியர் கூட அவர்களைப் பற்றிச் சொல்லி யுள்ளார். அவர்களது இன்முகமும், இனிமையான பேச்சுக்களும், பரிவான உதவிகளும் நோயாளி களுக்கு மிகவும் ஆறுதல் அளிக்கும் என்று அவர் கூறினர்.

**அண்ணன் :** ஆமாம் ; அவர்கள் பகலும், இரவும் ஒருவர் மாறி ஒருவர் நோயாளிகள் உள்ள அறையில் இருந்து அவர்களுக்கு அவ்வப்போது தேவையான உதவிகளைச் செய்வர்.

**தம்பி :** நோயாளிகள் எல்லோருமே மருத்துவ மனையில் தங்கிச் சிகிச்சை பெறுவார்களா ?

**அண்ணன் :** அப்படி யல்ல. பெரிய மருத்துவச்சாலை களில்தான் நோயாளிகள் தங்க வசதிகள் உண்டு. அங்கும் அதிக நோய் உள்ளவர்களைத்தான் தங்கச் செய்து சிகிச்சை செய்வார்கள். சாதாரண நோய் களுக்கு மருந்து கொடுத்து அனுப்பிவிடுவார்கள். அத்தகைய நோயாளிகள் அன்றுடம் அங்கு சென்று மருந்து வாங்கிக்கொள்வார்கள்.

**தம்பி :** மருந்து வாங்குவதற்கும், விடுதியில் தங்கிச் சிகிச்சை பெறுவதற்கும் கட்டணம் அதிகமாக இருக் குமே. அதை ஏழைகளால் எப்படித் தரமுடியும் ?

**அண்ணன் :** அரசினராலும், ஆட்சிக் கழகங்களாலும் நடத்தப்படும் மருத்துவ விடுதிகளில் ஏழைகளிடம் கட்டணமே வாங்க மாட்டார்கள். அதிக வருவாய் உள்ளவர்களிடமும், செல்வர்களிடமும்தான் கட்ட ணம் பெறுவார்கள்.

**தம்பி :** இத்தகைய மருத்துவ மனைகளும், மருத்துவ விடுதிகளும் ஊர்தோறும் ஏற்படுத்தப்படுமானல் நம் நாட்டு மக்கள் மிக்க இன்பமாக வாழ்வார்களல்லவா ?

**அண்ணன் :** ஆமாம் தம்பி, ஆயினும் இதைவிட முக் கியமானது மக்கள் நோயே வராமல் தடுக்கும் முறை யில் தங்கள் வாழ்க்கையை நடத்த வேண்டுமென்பது தான். அதில் அவர்கள் அதிக கவனம் செலுத்த வேண்டும். சரி, நேரமாகிறது. சாப்பிடப் போக லாம் வா.

## பயிற்சி

**1. விடை எழுது :**

1. தனிப்பட்ட மருத்துவ மனைகள் எந்தெந்த நோய்களுக்கு உள்ளன ?

2. மருத்துவ மனையில் நோயாளிகளின் தேவைகளைக் கவனிப்பவர்கள் யாவர் ?

3. தாதிமார்களின் கடமைகள் யாவை?

4. மருத்துவ மனைகள் ஏன் ஊர்தோறும் ஏற்படவேண்டும் ?

5. மருத்துவ மனையைப்பற்றி 15 வரிகளில் ஒரு கட்டுரை எழுது.

**2. கீழுள்ள சொற்களைத் தொடர்களில் அமைத்து எழுது :**

தூய்மைக் கேடு, தனிப்பட்ட, தவருமல், பிறவற்றை, பரிவான, ஒருவர் மாறி ஒருவர், ஊர்தோறும், அன்ருடம், தங்கச்செய்.

**3. கீழுள்ள எச்சத் தொடர்களை நிரப்பி முற்றுத் தொடர்களாக மாற்று :**

1. அரசினர் மக்களுக்கு மருத்துவ உதவி அளிப்பதற்காக............

2. நோய்களை வளரவிடாமல்............

3. தாதிமார்கள் நோயாளிகளுக்கு வேண்டிய............

4. சாதாரண நோய்களுக்கு............

5. சில மருத்துவ மனைகளில் ஏழைகளிடம்............

**4. கீழுள்ள தன்வினைகளுக்குப் பிறவினை கூறு :**

திறக்கிருர்கள், செய்வார்கள், சென்று, நடத்தவேண்டும், வா.

# 23. நரி

சிலர் தாம் நினைத்ததை நேர்மையான வழியில் செய்து முடிக்கமாட்டார்கள்; குறுக்கு வழியினாலும், சூழ்ச்சியினாலுமே அதனைச் செய்து முடிப்பார்கள். அத்தகைய தந்திரக்காரர்களை நரிக் குணம் வாய்ந்தவர்கள் என்பது வழக்கம். அக் குணத்தில் சிறந்து விளங்குபவர்களைக் குள்ளநரிகள் என்றே சொல்லலாம். நரிகள் சூழ்ச்சியில் வல்லவை. ஆதலின் அக் குணம் படைத்த மக்களையும் நரி என்று அழைக்கிறார்கள். நீங்கள் நரிகளின் தந்திரத்தைப் பல கதைகளின் மூலம் அறிந்திருப்பீர்கள்.

அறிவிற் சிறந்த சிலர் வஞ்சகர்களாய் இருப்பதைப் பார்க்கிறோம். அதற்குப் பல காரணங்கள் உள்ளன. அவைகளில் ஒன்று தக்க ஆற்றல் இல்லாமையேயாகும். தாம் நினைத்ததைச் செய்து முடிப்பதற்கு வேண்டிய ஆற்றல் இல்லாத சிலர் சூழ்ச்சியினால் அதனை நிறைவேற்றிக் கொள்ள முயல்கின்றனர். அறிவும், அதற்கேற்ற ஆற்றலும் பெற்றவர்கள் சூழ்ச்சியை மேற்கொள்ளமாட்டார்கள். நரிகள் போதிய அறிவு பெற்றவை; ஆயினும், உடல் வன்மை இல்லாத காரணத்தால் சூழ்ச்சியை மேற்கொள்கின்றன. சிங்கம், யானை போன்றவை சூழ்ச்சியாக எதனையும் செய்யமாட்டா. ஆகவே, நரிகள் தம் பலக் குறைவைச் சரிக்கட்டிக்கொள்ளவே தந்திரத்தைக் கையாள்கின்றன என்பது தெளிவு.

நரிகளில் பலவகை யுண்டு. நரிகளிலெல்லாம் மிகச் சிறியது குள்ளநரியேயாகும். அது உருவத்தில் மிகவும் சிறியதாயிருப்பினும், தந்திரத்தில் மிகவும் பெரியதாக விளங்குகின்றது. பொதுவாக நரிகள் அடர்ந்த புதர்களிலும், மலைக் குகைகளிலும் வாழும்; சம வெளிப் பகுதிகளில் வளை தோண்டிக்கொண்டு வாழ்வதும் உண்டு. எங்கு வாழ்ந்தாலும் அவற்றின் இருப்பிடத்திற்கு இரண்டு மூன்று வழிகள் இருக்கும். அவ்வாறு இருப்பதன் காரணம் அறிய முடியாததன்று. நரிகளுக்குக் குழி தோண்

டவும், மரமேறவும், நீரில் நீந்தவும் தெரியும். அவற்றிற்குச் செவியுணர்வு மிகுதி. நெடுந் தொலேவில் ஏற்படும் ஒரு சிறு ஒலியையும் அவை கேட்டுவிடும். நரிகளுக்கும் பூனேகளேப்போல் வேண்டியநேரத்தில் மட்டும் பயன்படுத்திக்கொள்ளும் வகையில் நகங்கள் அமைந்துள்ளன.

நரிகள் மற்ற பல விலங்குகளேப் போலன்றிக் கூடி வாழும் இயல்புடையவை. ஆதலால் அவையும் நம்மைப் போல் சமூக வாழ்வு வாழ்பவை என்னலாம். இரை தேடச் செல்லும்போதும் அவை தனித்துச் செல்வதில்லே. ஒரு பெண் நரி ஒரு முறைக்கு எட்டு அல்லது ஒன்பது குட்டிகளே ஈனும். நரிகள் பொதுவாக பத்து அல்லது பதினேந்து ஆண்டுகள் வரை உயிர் வாழும்.

நரிகள் இரை தேடும் விதத்தைப்பற்றிப் பல கதைகள் வழங்குகின்றன. பெண் நரி மறைவான ஓர் இடத்தில் பதுங்கிக்கொள்ளும். அப்போது ஆண் நரி வேறு பக்கம் சென்று முயல் முதலிய ஏதேனும் ஓர் இரையைத் தன் பெட்டை இருக்கும் பக்கமாகத் துரத்திக்கொண்டு வரும். மறைந்திருக்கும் பெண் நரி அந்த இரை தன் அருகில் வந்ததும் சட்டென்று பாய்ந்து அதனேப் பற்றிக் கொள்ளும். மற்றும், மரத்தின்மேல் இருக்கும் பறவைகளேப் பிடிப்பதற்குச் சில நரிகள் கையாளும் தந்திரம் மிகவும் வேடிக்கையானதாகும். அந் நரி பறவை இருக்கும் மரத்தின் அடியில் சென்று அதன் பார்வையில் படும்படியாக நின்றுகொள்ளும். பிறகு தனது வாலேயே பிடிக்க முயல்வதுபோல் ஒரே இடத்தில் சுற்றிச் சுற்றி ஓடும். மேலுள்ள பறவை நரி சுற்றுவதையே உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கும். சிறிது நேரம் சென்றதும் பறவையின் தலே சுற்றத் தொடங்கும்; பின்னர் அது மயங்கிக் கீழே விழுந்து நரிக்கு இரையாய்விடும்.

இவை தவிர சில நரிகள் நண்டு வளேக்குள் தம்வாலே விடுமாம். நண்டு அவ் வாலேப் பற்றிக்கொண்டதும் விசையாக வாலே வெளியே இழுத்து அதைப் பற்றிக் கொண்டிருக்கும் நண்டைப் பிடித்துத் தின்றுவிடுமாம். ஒன்றும் இரை கிடைக்காவிடில் ஊருக்குள் புகுந்து கோழி,

ஆட்டுக்குட்டி முதலியவற்றைத் திருடிச் சென்று தின்பதும் உண்டு.

நரிக்குத் தன்னம்பிக்கை மிகுதியாக உண்டு. தன்னைச் சுற்றிலும் எதிரிகள் வளைத்துக்கொண்டாலும் அது அஞ்சி நடுங்குவதில்லை. வலையில் சிக்கிக்கொள்ளும் நேரத்திலும் அது பொறுமையை இழப்பதில்லை. தன் தந்திரத்தால் எப்படியாவது தப்பிவிடலாம் என்பது அதன் ஆழ்ந்த நம்பிக்கை. அதனால்தான் நெருக்கடியான நேரங்களிலும் நரிகள் நிதானமாகச் சிந்தித்தே செயலாற்றும். ஆதலால் அவை எதற்கும் அஞ்சுவதுமில்லை. அதனாற்றான் "பனங்காட்டு நரி சலசலப்புக் கஞ்சாது" என்னும் பழமொழியும் எழுந்தது.

### பயிற்சி

**1. விடை எழுது :**

1. யாரைக் குள்ளநரி என்னலாம் ?
2. அறிவிற் சிறந்த சிலர் வஞ்சகராயும் இருப்பதேன் ?
3. நரிகளின் இருப்பிடத்திற்குப் பல வழிகள் இருப்பது ஏன் ?
4. மரத்தில் உள்ள பறவைகளை நரிகள் எவ்வாறு பிடிக்கும் ?

**2. கீழுள்ள சொற்களை உனது சொந்த தொடர்களில் அமைத்து எழுது :**

சூழ்ச்சி, நிறைவேற்றிக்கொள்ள, கையாளுதல், நெடுந்தொலைவு, விசையாக, சலசலப்பு.

# 24. கடல் வளம்

மாணவர்களே! நீங்கள் நீர்வளம், நிலவளம், காட்டு வளம் ஆகியவற்றைப்பற்றி முன்னதாகவே அறிந்திருக் கிறீர்கள். நீர்வளம் ஒரு நாட்டுக்கு மிகவும் இன்றியமை யாதது என்றும் கற்றுள்ளீர்கள். கடல் வளம் என்ற இப் பாடத்தின் பெயரைப் பார்த்ததும் உங்களுக்கு என்ன எண்ணம் தோன்றியது? 'ஆறு, ஏரி போன்ற நீர்நிலை களாலும், நல்ல வயல்களாலும், காடுகளாலும் நமக்கு நன்மை பலவுண்டு. அதனால் அவற்றை வளங்கள் என் கிறோம். ஆனால், கடலால் நமக்கு என்ன நன்மை யிருக் கிறது?' என்று நீங்கள் ஐயுறலாம். குடிப்பதற்கும் தகுதி யற்ற நீரையுடைய கடலை ஏன் வளம் என்று கூறவேண் டும் என்று நீங்கள் வினவலாம்.

நீங்கள் எண்ணுவதுபோல் கடல் பயனற்றதன்று. கடலால் நாம் பல நன்மைகளை அடைகிறோம். மழைப் பாடத்தில், நீர்நிலைகளிலுள்ள நீர் ஆவியாக மேலே சென்று குளிர்ந்த காற்றுப்பட்டதும் மழையாகப் பொழி கின்றது என்று படித்தீர்களல்லவா? நீர்நிலைகள் அனைத் திலும் மிகப் பெரியது கடல். உலகத்தின் நிலப்பகுதியைப் போல் கடல் பகுதி இரண்டு பங்கு உள்ளது. மழைக்கு வேண்டிய நீராவியில் மிகப் பெரும்பகுதி கடலிலிருந்து செல்வதுதான். எனவே, மழை பெய்வதற்கு முக்கிய காரணமாயிருப்பது கடல் என்று கூறலாம்.

'உப்பிட்டவரை உள்ளளவும் நினை,' 'உப்பில்லாப் பண்டம் குப்பையிலே' என்ற பழமொழிகளை நீங்கள் கேட்டிருக்கிறீர்களா? நமது உணவுப் பொருள்களில் முக்கியமானது உப்பு. உப்பில்லாவிட்டால் நாம் உண வைச் சுவையாக உண்ண முடியாது. இந்த உப்பு நமக்கு எங்கிருந்து கிடைக்கிறதென்று எண்ணுகிறீர்கள். கடல்நீரை, அதன் அருகிலுள்ள நிலங்களில் அமைக்கப் பட்டிருக்கும் பாத்திகளில் பாய்ச்சுவார்கள். அது தெளிந்த பிறகு மேலோடு வடிகட்டி விடுவார்கள். அடியில் உப்பு படிந்திருக்கும். அது நன்றாகக் காய்ந்த பிறகு

உப்பைச் சுரண்டி எடுத்துக்கொள்வார்கள். இதிலிருந்து நமக்கு உப்பளிக்கும் தாய் கடல் என்று தெரிகிறதல்லவா?

கடல், உணவுக்கு வேண்டிய உப்பைத் தருவதோடு உணவையும் நமக்குத் தருகிறது. நிலத்தில் கிடைக்கும் உணவுப் பொருள்களை மட்டும் மக்கள் உண்டு வந்தால் எல்லா மக்களுக்கும் நெடுங் காலத்திற்கு உணவு கிடைப்பது அரிதாகிவிடும். அப் பற்றுக் குறையைக் கடலிலிருந்து கிடைக்கும் மீன் உணவால்தான் ஈடுசெய்து கொள்கிறோம். புலால் உண்ணும் பழக்கமுள்ளவர்களுக்கு மீன் முக்கியமான உணவாகின்றது. சிலவகை மீன்களிலிருந்து ஒருவித எண்ணெய் எடுக்கிறார்கள். வலிமை குறைந்தவர்களும், நோயால் உடல் மெலிந்தவர்களும் அம்மீனெண்ணெயைக் குடித்து உடல் உரம் பெறுகிறார்கள்.

முத்துமாலையைப் பெண்கள் கழுத்தில் அணிந்து மகிழ்கிறார்கள். அந்த முத்தும், பவழம் சங்கு போன்ற பிற பொருள்களும் கடலிலிருந்துதான் நமக்குக் கிடைக்கின்றன. பவழ மாலைகளும், சங்கு வளையல், சங்கு மோதிரம் ஆகியவைகளும் எவ்வளவு அழகாயிருக்கின்றன? இவ்வாறு நமக்கு வேண்டிய பல அழகுப் பொருள்களையும் கடல் தந்து நம்மை மகிழ்விக்கிறது. பண்டைக்கால முதல் நம் தமிழ் நாட்டின் முத்துக்கு, உலக முழுவதிலும் நல்ல மதிப்பு உண்டு. தமிழர்கள் மிக ஆழமான கடலில் மூழ்கி முத்தெடுப்பதில் வல்லவர்கள். கடலில் முத்தெடுப்பதை 'முத்துக் குளித்தல்' என்பர்.

கடற்கரையில் உள்ள ஊர்களில் வாழும் மக்கள் மாலை நேரங்களில் கடற்கரைக்குச் சென்று உலாவி வருவது வழக்கம். ஏனென்றால், கடற்காற்று மிகவும் குளிர்ச்சியாக இருப்பதால் அது உடலில் பட்டால் மிக்க இன்பமாக இருக்கும். மேலும், கடலிலிருந்து குளிர்ந்த காற்று நிலத்தை நோக்கி வீசிக் கொண்டிருப்பதால், நிலத்தில் உள்ளவர்களுக்கு ஞாயிற்றின் வெப்பம் மிகுதியாகத் தெரியாது.

மற்றும், போக்குவரவுக்கும், வாணிபத்திற்கும் கடல்

பேருதவி புரிகின்றது. வான ஊர்தி கண்டுபிடிக்கப்படுவதற்கு முன்வரைக் கடல் மூலமாகச் செல்லும் கப்பலூர்தியே மிகவும் சிறந்ததாகக் கருதப்பட்டது. வெளி நாடுகளுக்குத் தரைவழியாகச் சுற்றிச் சுற்றிச் செல்வதைவிட, கடலின் வழியாகக் கப்பலின் உதவியால் செல்வது எளிது. பண்டைக் காலத் தமிழ்நாட்டில் கடல் வாணிபம் சிறந்து விளங்கிற்று.

தென்னிந்தியாவின் மூன்று பக்கங்களிலும் கடல் இருக்கிறது. அதை மேலும் மேலும் பயன்படுத்திக் கொண்டால் நம் நாட்டு மக்கள் பலவகையிலும் சிறந்து வாழமுடியும்.

### பயிற்சி

**1.** விடை எழுது :

1. கடலால் நாம் அடையும் நன்மைகள் யாவை?
2. உப்பை எப்படி எடுக்கிறுர்கள் ?
3. ‘ முத்துக் குளித்தல் ’ என்ருல் என்ன ?
4. கப்பலூர்தி ஏன் சிறந்ததாகக் கருதப்பட்டது ?

**2.** கீழுள்ள சொற்களைத் தொடர்களில் அமைத்து எழுது :
பெரும்பகுதி, அரிதாகி, ஈடுசெய்து, பழக்கமுள்ள, வல்லவர்கள், மேலும் மேலும்.

**3.** தடித்த எழுத்திலுள்ள சொற்களுக்குப் பதிலாகப் பொருத்தமான வேறு சொற்களை எழுது :

1. உங்களுக்கு என்ன **எண்ணம் தோன்றியது?**
2. இத்தண்ணீர் குடிப்பதற்குத் **தகுதியுடையதா** என்று **ஐயுற்றேன்.**
3. நீர்நிலைகள் **அனைத்திலும்** பெரியது கடல்.
4. மீன் உணவால் **ஈடு** செய்யலாம்.
5. **வாணிபத்திற்கும் கடல் பேருதவி** புரிகின்றது.

**4.** அவர் என் தாயார்.

இத்தொடரில் அவர் என்பது பன்மைபோல் தோன்றுகிறதல்லவா? இது பன்மைச் சொல்லல்ல. ஒருமைச் சொல்தான். உயர்வுக்காக ஒருமையைப் பன்மையாகக் கூறுவதுண்டு. அதற்கு **உயர்வுப் பன்மை** என்று பெயர்.

அப்பா ! **அவர்** வந்தார்.

தாத்தா ! **நீங்கள்** எங்கே செல்கிறீர்கள் ?

இவற்றிலுள்ள அவர், நீங்கள் என்பன போல ஒருவரைக் குறித்து வருவன எல்லாம் உயர்வுப் பன்மைகளே.

# 25. சட்ட சபை



நமது நாடு குடியரசு நாடு. இது சில ஆண்டு களுக்கு முன்வரை முடியாட்சி நாடாக இருந்தது. அதாவது, முடிமன்னர் ஒருவரின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. பல அருந் தலைவர்களின் உழைப்பால் நமக்கு விடுதலை கிடைத்தது; முடியாட்சி மாறிக் குடியாட்சி ஏற்பட்டது. குடியாட்சி என்றால் மக்கள் தம்மைத் தாமே ஆண்டு கொள்ளுதல் என்பதாகும். ஆனால் மக்கள் எல்லோரும் ஆட்சி செய்தல் என்பது இயலக்கூடியதல்லவே. எனவே, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சிலர் கூடி நாட்டிற்குத் தேவையானவற்றைச் சிந்தித்து ஒரு முடிவிற்கு வந்து, அதனைச் சட்டமாக்குவர். அதன்படி ஆட்சி நடைபெறும்.

இவ்வாறு மாநில ஆட்சிக்குத் தேவையான சட்டங்களை இயற்றுவதற்காக மாநிலச் சட்ட சபைகள் இருக்கின்றன. சட்ட சபையில் இரு பிரிவுகள் உண்டு. அவை, கீழ்ச் சபை, மேற் சபை எனப்படும். சென்னை, பம்பாய், கல்கத்தா போன்ற பெரிய மாநிலங்களில்

இருவகைச் சபைகளும் இருக்கின்றன. சிறிய மாநிலங்களில் கீழ்ச் சபை மட்டுமே இருக்கும்.

கீழ்ச் சபையில் 500-க்கு மேற்படாத உறுப்பினர்கள் இருப்பார்கள். இவர்கள் அனைவரும் பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இவர்கள் ஐந்து ஆண்டு காலம் பதவியில் இருக்கலாம். இச் சட்டசபை உறுப்பினர்களைத்தான் சுருக்கமாக எம். எல். ஏ-க்கள் என்று கூறுகிறோம். இவர்கள் பொதுமக்களின் நன்மைகளுக்காகப் பணி செய்வதால் மாதம் ஒன்றுக்கு நூற்றைம்பது ரூபாய்கள் ஊதியமாகப் பெறுகிறார்கள்.

கீழ்ச் சபை உறுப்பினர்கள் தங்களுக்குள் ஒரு தலைவரை தேர்ந்தெடுத்துக் கொள்வார்கள். கீழ்ச் சபைத் தலைவருக்குச் சபாநாயகர் என்றும், துணைத் தலைவருக்கு உதவிச் சபாநாயகர் என்றும் பெயர்.

மேற்சபை உறுப்பினர்கள், கீழ்ச்சபை உறுப்பினர்களின் எண்ணிக்கையில் நாலில் ஒரு பங்கு பேர்தான் இருப்பர். இவர்களிலும் பெரும்பாலோர் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களே. சிலர் மட்டும் மாநில ஆளுநரால் நியமிக்கப்படுவர். சமூகத் தொண்டு, இலக்கியம், கலை முதலியவற்றில் நற்பெயர் பெற்றவர்களையே ஆளுநர் நியமிப்பார். இச்சபை உறுப்பினர்களும் தங்களுக்குள் ஒரு தலைவரையும், துணைத் தலைவரையும் தேர்ந்தெடுத்துக் கொள்வார்கள்.

கீழ்ச் சபை, மேற்சபை ஆகிய இரு சபைகளுள்ளும் கீழ்ச் சபைக்கே அதிக அதிகாரம் உண்டு. கீழ்ச்சபையில் தான் மாநிலத்தின் அரசியல் வரவு செலவு பற்றிய விவாதங்கள் நடைபெறும். கீழ்ச்சபை இயற்றும் சட்டங்களைத் தேவைப்படின் மேற்சபை திருத்தம் செய்யும். அத் திருத்தங்களை ஏற்கவும், மறுக்கவும் சீழ்ச்சபைக்கு உரிமை உண்டு.

சட்ட சபைகள் இயற்றும் சட்டங்கள் எல்லாம் உடனே செயல் முறைக்கு வந்துவிட முடியாது. அவற்றை மாநில ஆளுநர் அனுமதிக்க வேண்டும். இயற்றப்பட்ட சட்டத்தினால் நாட்டின் நலன் பாதிக்கப்படுமெனத்

தோன்றின், ஆளுநர் அச்சட்டத்தைப்பற்றி மறுமுறையும் யோசித்துப் பார்த்து முடிவுக்கு வருமாறு திருப்பி விடுவார்.

நாம், நமக்குள் சிலரைத் தேர்ந்தெடுத்துச் சட்ட சபைக்கு உறுப்பினர்களாக அனுப்புகிறோம். அவர்கள் நாட்டுக்குத் தேவையான பல சட்டங்களை இயற்றுகிறார்கள். அவற்றை, மாநில ஆளுநர் அனுமதித்ததும், நாட்டில் நடைமுறைக்குக் கொண்டு வருகின்றனர். எனவே, நாமே நமக்கு வேண்டிய சட்டங்களை இயற்றிக் கொள்வதால் நம்மை நாமே ஆண்டு கொள்ளுகிறோம் என்று கூறுவது சரியல்லவா ?

## பயிற்சி

**1.** விடை எழுது :

1. முடியாட்சி என்றால் என்ன ? குடியாட்சி என்றால் என்ன ?

2. சட்ட சபையின் இரு பிரிவுகள் யாவை ?

3. மேல் சபைக்கு எத்தகையோரை உறுப்பினராக ஆளுநர் நியமிப்பார் ?

4. சட்டசபை இயற்றும் சட்டங்கள் எப்போது செயல் முறைக்கு வரும் ?

**2.** கீழுள்ள சொற்களைத் தொடர்களில் அமைத்து எழுது :

தம்மைத் தாமே, இயலக் கூடிய, இயற்றுவதற்காக, பெரும்பாலோர், விவாதங்கள்.

**3.** கீழுள்ள எச்சத் தொடர்களை முற்றுத் தொடர்களாக மாற்று :

1. குடியாட்சி என்றால் .........
2. கீழ்ச்சபை உறுப்பினர்கள் தங்களுக்குள் .........
3. மேல் சபையை விட .........
4. சட்டசபைகள் இயற்றும் சட்டங்களை .........
5. சட்டசபை உறுப்பினர்கள் பொது மக்களின் .........

**4.** இப்பாடத்திலிருந்து பத்து வினைச் சொற்களை எடுத்து, அவற்றிற்கு முக்கால வினைச்சொற்களும் கூறு.

# 26. உயிர்க் கொடை

முற்காலத்தில் பெருஞ் செல்வர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் ஒரு சமயம் நெடுந்தொலைவிலிருந்த தம் உறவினர் ஒருவரைக் காணத் தம் குடும்பத்துடன் சென்றார். அவர்கள் மிக வேகமாகச் செல்லக் கூடிய நான்கு குதிரைகள் பூட்டிய வண்டியொன்றில் ஏறிச் சென்றனர். வண்டியோட்டி, வண்டியோட்டுவதில் மிக்க திறமைசாலி; தன் தலைவனிடம் மிக்க அன்பும் கொண்டவன்.

வண்டி ஒரு பெருங் காட்டைக் கடந்து செல்லவேண்டி யிருந்தது. கொடிய விலங்குகளால் வழியில் துன்பம் நேரிடுமோ என்ற அச்சம் வண்டியோட்டிக்கு இருந்தது. எனவே அவன் குதிரைகளை வேகமாகச் செலுத்தினான். அவன் அச்சத்திற்கேற்ப ஓநாய்களின் கூட்ட மொன்று வண்டியைத் துரத்தி வருவதைக் கண்டான். அவைகளிடம் சிக்கினால் அனைவரும் அவைகளுக்கு இரையாக நேரிடும். எனவே வண்டியிலிருந்தோர் நடுநடுங்கினர்.

வண்டியோட்டி சிறிதும் தாமதியாது வண்டியில் பூட்டியிருந்த நான்கு குதிரைகளுள் ஒன்றினை அவிழ்த்து விட்டுவிட்டு, வண்டியை இன்னும் வேகமாகச் செலுத்தத் தொடங்கினான். அவிழ்த்துவிடப்பட்ட குதிரையை ஓநாய்கள் துரத்திச் சென்று, அதனைக் கொன்று தின்ன ஆரம்பித்தன.

குதிரையைத் தின்று முடித்து ஓநாய்கள் மறுபடியும் வண்டியைத் தொடர்வதற்குமுன், காட்டைக் கடக்க வேண்டுமென்று வண்டி யோட்டி எவ்வளவு முயன்றும் இயலாமற் போயிற்று. ஓநாய்க் கூட்டம் மறுபடியும் வண்டியைத் துரத்தி வந்தது. எனவே, மற்றொரு குதிரையையும் வண்டியிலிருந்து அவிழ்த்து விட்டுவிட்டு வண்டியை ஓட்டினான். இம்முறையும் ஓநாய்கள் அக் குதிரையைத் தின்றுவிட்டு, மீண்டும் வண்டியைத் துரத்தத் தொடங்கின.

ஓநாய்க்கூட்டம் நெருங்குவதைக் கண்ட வண்டி யோட்டி, வேறு வழியின்றி மற்றும் ஒரு குதிரையை அவிழ்த்து விட்டான். எஞ்சியிருந்த ஒரே குதிரையுடன் வண்டியைக் கூடுமான அளவு வேகத்துடன் செலுத் தினன். எவ்வாறேனும் காட்டைக் கடந்துவிட்டால்



ஓநாய்களிடமிருந்து தப்பலாம் என்பதே அவனது எண்ணமாகும்.

மூன்று குதிரைகளைத் தின்ற பிறகும் ஓநாய்களின் பசி தணியவில்லை. அவை மறுபடியும் வண்டியைத் துரத் தின. வண்டியோட்டி அதனைக் கண்டு மிகவும் அச்சம் கொண்டான். வண்டியில் ஒரே குதிரை இருப்பதால் அதை அவிழ்த்து விட்டால் வண்டியைச் செலுத்தவே முடியாது. அன்றி, காலம் சிறிது தாழ்த்தினுலும் ஓநாய் கள் நெருங்கி வந்து அனைவர்மீதும் பாய்ந்து கொன்று விடும். வண்டியில் இருந்த செல்வருக்கும் என்ன செய்வ தென்று புரியவில்லை.

வண்டியோட்டி தன் கையில் பற்றியிருந்த குதிரை யின் சேணக் கயிற்றைச் செல்வரிடம் கொடுத்தான்; "இதைத் தாங்கள் பிடித்துக்கொண்டு முடிந்த அளவு விரைவுடன் குதிரையை ஓட்டுங்கள். எப்படியும் காட்டைக்

கடக்க முயற்சி செய்யுங்கள்'' என்று கூறினன். செல்வர் சிந்திப்பதற்கு நேரம் சிறிதும் அளிக்காமல் வண்டியிலிருந்து கீழே குதித்துவிட்டான். ஓநாய்கள் அவன்மீது பாய்ந்து அவனைக் கொன்று விட்டன; அவனது உடலைத் தின்னத் தொடங்கின.

இதற்கிடையில் வண்டி காட்டைக் கடந்துவிட்டது. ஓநாய்களின் தொல்லை நீங்கியது. செல்வரும் அவரது குடும்பத்தினரும் உயிர் தப்பினர். அவர்களைக் காப்பதற்காக வண்டிக்காரன் தன் உயிரையே கொடுத்தான். அவன் அவ்வாறு செய்ததற்குக் காரணம் வெறும் கடமை உணர்ச்சி மட்டுமல்ல; தன் தலைவனிடம் அவன் கொண்டிருந்த அன்பும் ஆகும். அவன் அன்பிற்கு அறிகுறியாக தன் உயிரையே கொடையாக அளித்தான் என்று கூறுவது பொருந்துமல்லவா ?

## பயிற்சி

**1. விடை எழுது :**

1. ஓநாய்கள் துரத்துவதைக் கண்டு வண்டியிலிருந்தோர் ஏன் நடுங்கினர் ?
2. வண்டியோட்டி ஒவ்வொரு குதிரையாக ஏன் அவிழ்த்து விட்டான் ?
3. வண்டியோட்டி கடைசிக் குதிரையை ஏன் அவிழ்த்துவிடவில்லை ? வேறு என்ன செய்தான் ?
4. வண்டியோட்டி தன் தலைவனிடம் கொண்டிருந்த அன்பு எவ்வாறு தெரிகிறது ?

**2. கீழுள்ள சொற்களைத் தொடர்களில் அமைத்து எழுது :**

செல்லக்கூடிய, நடுநடுங்கினர், தொடர்வதற்குமுன், வேறு வழியின்றி, கூடுமான அளவு, எவ்வாறேனும், இதற்கிடையில், கடமை உணர்ச்சி.

**3. தடித்த எழுத்திலுள்ள சொற்களுக்குப் பதிலாக வேறு தக்க சொற்களை எழுது :**

1. தம் உறவினர் ஒருவரைக் **காணச் சென்றார்.**
2. விலங்குகளைப் பற்றிய **அச்சம்** ஏற்பட்டது.
3. வண்டியை வேகமாகச் செலுத்தத் **தொடங்கினன்.**
4. ஓநாய்களின் பசி **தணியவில்லை.**
5. செல்வர் சிந்திப்பதற்கு நேரம் சிறிதும் **அளிக்கவில்லை.**

**4. இப்பாடத்திலிருந்து அறுவகைப் பெயருக்கும் இரண்டிரண்டு சொற்கள் எடுத்தெழுது.**

# 27. கள்வன் யார்?

## காட்சி 1

[காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து வந்த கோவலன் தன் மனைவி கண்ணகியின் சிலம்புகளில் ஒன்றை விற்பதற்காக மதுரைக் கடைத் தெருவில் சென்று கொண்டிருக்கிறான். அரண்மனையில் நகைகள் செய்யும் பொற்கொல்லன், அவன் எதிரில் வருகிறான்.]

**கோவலன் :** ஐயா! வணக்கம். நான் இச்சிலம்பை விற்க விரும்புகிறேன். அரசரைத் தவிர வேறு யாரும் இதை வாங்க மாட்டார்கள் என்று கூறுகிறார்கள். தாங்கள் இதனை விற்றுத் தர முடியுமா?

**பொற் கொல்லன் :** (சிலம்பைக் கையில் வாங்கி உற்றுப் பார்த்துவிட்டுத் திருட்டுச் சிரிப்புடன்) நான் அரண்மனைப் பொற்கொல்லன். இதோ இருப்பதுதான் என் வீடு. நீங்கள் இங்கேயே இருங்கள். நான் அரசரிடம் சென்று கூறி, விலை பேசி வருகிறேன்.

(கோவலன், பொற் கொல்லன் வீட்டுத் திண்ணையில் உட்காருகிறான். பொற்கொல்லன் அரண்மனைக்குச் செல்கிறான். அரசன் ஏதோ அவசரமாகவும், வருத்தமாகவும் சென்று கொண்டிருக்கிறான்.)

**பொற் கொல்லன் :** மன்னர் மன்னா! மன்னிக்க வேண்டும். நம் பேரரசியாரின் சிலம்பைத் திருடிய கள்வன் அகப்பட்டுக்கொண்டான். (கூறிக்கொண்டே அரசனை வணங்குகிறான்.)

**அரசன் :** யார் அக்கள்வன்? அவன் எங்கே யிருக்கிறான்?

**பொற் கொல்லன் :** அரசே! அவன் என் வீட்டில் இருக்கிறான்.

**அரசன் :** ஆ! என்ன ஆச்சரியம்! நீ திருடியிருக்க வேண்டுமென்றல்லவா நான் நினைத்துக்கொண்டிருந்தேன்?

பொற் கொல்லன் : தங்கள் அரண்மனைச் சோற்றைத் தின்று வளர்ந்த இந்த நாய் அப்படியெல்லாம் செய்யாது மன்னவா !

அரசன் : நான் தவறுதலாக உன்மீது சந்தேகப்பட்டு விட்டேன். இப்போதுதான் உண்மை புரிகிறது. நான் அவசரமாகப் போகவேண்டும். இதைப்பற்றி யோசிக்கவும் நேரமில்லை. சரி, காவலா ! (காவலன் ஓடிவருதல்) இவருடன் சென்று, இவர் காட்டும் கள்வனைக் கொன்று, அவனிடமுள்ள நம் அரசியின் சிலம்பைக் கொண்டு வா.

(காவலன் வணங்கி விட்டுப் பொற்கொல்லனுடன் செல்கிறான். கோவலன் கொல்லப்படுகிறான்.)

## காட்சி 2

[அரசன் முன் கண்ணகி தனது மற்றொரு சிலம்புடன் தலைவிரி கோலமாய் நின்றுகொண்டிருக்கிறாள்.]

அரசன் : மிக்க துயரத்துடன் என்னைக் காண வந்துள்ள பெண்ணே! நீ யாரம்மா? உன் பெயரென்ன? உனக்கு என்ன குறை நேர்ந்தது?

கண்ணகி : அவசர புத்தியுள்ள அரசனே ! சற்று முன் உன்னால் அநியாயமாகக் கொல்லப்பட்ட கோவலனின் மனைவி நான். என் பெயர் கண்ணகி.

அரசன் : பெண்மணியே ! கள்வனைக் கொல்வது தவறல்லவே ? அதுதானே அரசனுக்கு அறம் ?

கண்ணகி : கள்வன் யார் ? என் கணவரா ? யார் சொன்னார்கள் ? எப்படி அறிந்தாய் அவர் கள்வரென்பதை ? கூறு மன்னா ! கூறு. அவருடைய கள்ளங் கபடமற்ற தெளிந்த முகத்தை நீ பார்த்தாயா ? அவருடைய நேர்மையான விழிகளை நீ நோக்கினாயா? அவரது இனிய மொழிகளை நீ கேட்டாயா ? எப்படி அவர் கள்வர் என்று முடிவு கட்டினாய் ?

அரசன் : பெண்கள் திலகமே ! துன்ப மிகுதியால் நீ பதட்டமாகப் பேசுகிறாய். உன் துயரத்தைக் காண

என் நெஞ்சம் பதறுகிறது. என்ன செய்யலாம்? குற்றவாளிகளைத் தண்டிக்காமல் விடுவது அற மாகாதே!

**கண்ணகி:** உனது அறவுரைகள் எனக்கு வேண்டாம். என் கணவரைக் கள்வர் என்று காட்டிய ஆதாரம் யாது? அதனைக் கூறவேண்டுகிறேன்.

**அரசன்:** அம்மா கண்ணகி! இதோ இருக்கிறது உன் கணவனிடமிருந்து கைப்பற்றிய சிலம்பு. இது என் மனைவியின் சிலம்பு. எனவே, கையும் களவுமாகப் பிடித்துவிட்ட பிறகு வேறு ஆராய்ச்சி ஏன்? அதனுல்தான் நான் அவனைக் கொலை செய்யச் சொன்னேன்.



**கண்ணகி:** அது உன் மனைவியின் சிலம்பா? அல்ல; அல்ல; நிச்சயமாக அல்ல. அது என்னுடைய சிலம்பே. அதன் இணையான மற்ரெரு சிலம்பும்

இதோ இருக்கிறது. என் சிலம்புகளில் மாணிக்கக் கற்கள் பரல்களாக இடப்பட்டுள்ளன.

**அரசன் :** நல்லது நங்கையே! என் சிலம்புகளில் முத்துப் பரல்கள்தான் உள்ளன. அச் சிலம்பை இப்போதே உடைத்துப் பார்த்தால் உண்மை வெளியாகிவிடும்.

(அச்சிலம்பை எடுத்துப் பெருஞ் சீற்றத்துடன் கண்ணகி கீழே அடித்து உடைக்கிருள். அதன் உள்ளிருந்த மாணிக்கப் பரல்கள் நாற்றிசையிலும் சிதறியோடுகின்றன. ஒரு மாணிக்கக் கல் அரசனின் வாயில் போய் அடித்து விழுகிறது.)

**அரசன் :** (உண்மையை உணர்ந்து, திடுக்கிட்டு, அறிவு கலங்கி) யார் சிலம்பு திருடிய கள்வன்? கோவலனு? பொற்கொல்லனு? அல்ல; அல்ல; நானேதான். கோவலனை ஆராயாது கொன்ற நானு அரசன்? நான்தான் கள்வன். இம் மாபெருங் கேட்டைச் செய்த என் உயிர் அழிக! (என்று கூறிக்கொண்டே கீழே விழுந்து இறக்கிருன்.)

### பயிற்சி

**1. விடை எழுது :**

1. அரசன் ஆராயாது செய்த தவறு யாது?
2. சிலம்பு அரசியுடையதல்ல என்பதைக் கண்ணகி எவ்வாறு மெய்ப்பித்தாள்?
3. தவற்றை யுணர்ந்த அரசன் என்ன செய்தான்?

**2. நீங்கள் உங்கள் நண்பர்களுடன் சேர்ந்து இந் நாடகத்தை நடித்துப் பாருங்கள்.**

# செய்யுட் பகுதி

## 1. வாழ்த்து

### 1. தேவாரம்

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே.

—திருநாவுக்கரசர்

### 2. திருவாசகம்

யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்
யாவர்க்கும் கீழாம் அடியேனை—யாவரும்
பெற்றறியா இன்பத்துள் வைத்தாய்க்கென் எம்பெருமான்
மற்றறியேன் செய்யும் வகை.

—மாணிக்கவாசகர்

### 3. தேம்பாவணி

அறம், தாய், தந்தை, சுற்றமும் மற்றனைத்தும்
நீயே ; கதிநீயே ;
பிறந்தாய் உலகிற் குயிரன்னோய் ; பிறந்தெம்
துயரும், எம்பகையும்
துறந்தாய் ; எங்கள் சிறைதீர்த்தாய் ; துகள்பூட்
டியவீட் டுயர்வாயில்
திறந்தாய் ; இவையா வருமறியத் திறன்செய்
தருள்செய் திரங்காயோ ?

—வீரமாமுனிவர்

### 4. திவ்யப் பிரபந்தம்

எந்தாய் ! என் மனம்புகுந்தாய் ; மன்னி நின்றாய் ;
நந்தாத கொழுஞ்சுடரே ! எங்கள் நம்பீ !
சிந்தா மணியே ! திருவேங் கடமேய
எந்தாய் !இனி யான்உனை என்றும் விடேனே.

—திருமங்கையாழ்வார்

## 5. சீறாப் புராணம்

சிறந்த மெய்ப்பொருளை, அழிவிலா மணியைத்,
தெரிந்து முக்காலமு முணர்ந்து,
துறந்தவர் இதயா சனத்திருந் தவனைத்,
தொடரின்ப துன்பமற் றவனைப்,
பிறந்த பல்லுயிரின் மனத்தள வுறைந்து
பிறப்பிறப் பொன்றிலா தவனை,
மறந்தவர் சுவர்க்கப் பதியையும் மறந்து
மண்ணினில் மதிமறந் தவரே.

—உமறுப் புலவர்

## 6. திருக்குறள்

அகர முதல எழுத்தெல்லாம் ; ஆதி
பகவன் முதற்றே உலகு. 1

கற்றதனால் ஆய பயனென்கொல் ? வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின். 2

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். 3

வேண்டுதல்வேண் டாமை இலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல. 4

இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. 5

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார். 6

தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது. 7

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது. 8

கோளில் பொறியின் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை. 9

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் ; நீந்தார்
இறைவன் அடிசேரா தார். 10

—திருவள்ளுவர்

# 2. அறவுரை

## 1. திருக்குறள்

விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றுங்கே
பசும்புல் தலைகாண் பரிது. 1

செயற்கரிய செய்வார் பெரியர் ; சிறியர்
செயற்கரிய செய்கலா தார். 2

ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய். 3

இனிய உளவாக இன்னாத கூறல்,
கனியிருப்பக் காய் கவர்ந் தற்று. 4

நன்றி மறப்பது நன்றன்று ; நன்றல்ல
தன்றே மறப்பது நன்று. 5

ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு. 6

வாய்மை எனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல். 7

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. 8

மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்தியது
அற்றது போற்றி உணின். 9

ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு. 10

—திருவள்ளுவர்

## 2. நீதி வெண்பா

ஈக்கு விடம்தலையில் ; எய்துமிருந் தேளுக்கு
வாய்த்த விடம்கொடுக்கில் வாழுமே ;—நோக்கரிய
பைங்கணர வுக்குவிடம் பல்லளவே ; துர்ச்சனருக்
கங்கமுழு தும்விடமே யாம். 1

கொம்புளதற் கைந்து ; குதிரைக்குப் பத்துமுழம் ;
வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே ;—வம்புசெறி
தீங்கினர்தம் கண்ணில் தெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி. 2

பொன்னும், கரும்பும், புகழ்பாலும், சந்தனமும்
சின்னம் படவருத்தம் செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமே தோன்றும் ; நலிந்தாலும் உத்தமர்பால்
நற்குணமே தோன்றும் நயந்து. 3

நிந்தையிலாத் தூயவரும் நிந்தையரைச் சேரிலவர்
நிந்தையது தம்மிடத்தே நிற்குமே—நிந்தைமிகு
தாலநிழல் கீழிருந்தான் றன்பால் அருந்திடினும்
பாலதெனச் சொல்லுவரோ பார். 4

கல்லார் பலர்கூடிக் காதலித்து வாழினும்நூல்
வல்லான் ஒருவனையே மானுவரோ ?—அல்லாரும்
எண்ணிலா வான்மீன் இலகிடினும் வானகத்தோர்
வெண்ணிலா வாமோ விளம்பு. 5

—பிற்காலப் புலவர் ஒருவர்.

## 3. அற நெறிச் சாரம்

இன்சொல் விளைநிலமா, ஈதலே வித்தாக,
வன்சொல் களைகட்டு, வாய்மை எருவட்டி,
அன்புநீர் பாய்ச்சி, அறக்கதிர் ஈன்றதோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய். 1

வைகலும் நீருள் கிடப்பினும் கல்லிற்கு
மெல்லென்றல் சால அரிதாகும்.—அஃதேபோல்
வைகலும் நல்லறம் கேட்பினும் கீழ்கட்குக்
கல்லினும் வல்லென்னும் நெஞ்சு. 2

புனைபடை கண்டஞ்சித் தற்காப்பான் தன்னை
வினைகடியும் என்றடி வீழ்தல்—கனையிருட்கண்
பல்லெலி தின்னப் பறைந்திருந்த பூனையை
இல்லெலி காக்குமென் றற்று. 3

எள்ளிப் பிறருரைக்கும் இன்னுச்சொல் தன்னெஞ்சில்
கொள்ளிவைத் தாற்போல் கொடிதெனினும்—மெள்ள
அறிவென்னும் நீரால் அவித்தொழுகல் ஆற்றின்
பிறிதொன்றும் வேண்டா தவம். 4

காலொடு கையமுக்கிப் பிள்ளையை வாய்நெறித்துப்
பாலொடு நெய்பெய்யும் தாயனையர்—சால
அடக்கத்தை வேண்டி அறன்வலிது நாளும்
கொடுத்துமேற் கொண்டொழுகு வார். 5

—முனைப்பாடியார்.

## 4. ஆசாரக் கோவை

நன்றி யறிதல், பொறையுடைமை, இன்சொல்லோ,
டின்னுத எவ்வுயிர்க்கும் செய்யாமை, கல்வியோ,
டொப்புற வாற்ற அறிதல், அறிவுடைமை,
நல்லினத் தாரோடு நட்டல் இவைஎட்டும்
சொல்லிய ஆசார வித்து. 1

நீராடும் போழ்தில் நெறிப்பட்டார் எஞ்ஞான்றும்
நீந்தார், உமியார், திளையார், விளையாடார்,
காய்ந்த தெனினும் தலையொழிந் தாடாரே
ஆய்ந்த அறிவி னவர். 2

கிடந்துண்ணர், நின்றுண்ணர், வெள்ளிடையும் உண்ணர்,
சிறந்து மிகவுண்ணர், கட்டில்மேல் உண்ணர்,
இறந்தொன்றும் தின்னற்க நின்று. 3

சுடரிடைப் போகார், சுவர்மேல் உமியார்,
இடர்எனினும் மாசுணி கீழ்தம்மேல் கொள்ளார்,
படைவரினும் ஆடை வளியுறைப்பப் போகார்,
பலரிடை ஆடை உதிராரே என்றும்
கடனறி காட்சி யவர். 4

படிறும், பயனிலவும், பட்டி உரையும்,
வசையும், புறனும் உரையாரே என்றும்
அசையாத உள்ளத் தவர். 5

—பெருவாயின் முள்ளியார்.

## 3. கதை

### கள்ளக் குள்ளன்

காரிருள் சூழ்ந்து மக்கள் கண்ணயர்ந்
துறங்கும் நேரம்,
ஓரிரு நரிகள் கூடி ஊளேயிட்
டுலாவும் நேரம்,
ஏரியில் தவளேக் கூட்டம்
தணதண தத்தோம் என்று
பேரிகை கொட்டி ஆடிப் பேரிசை
பாடும் நேரம். 1

ஆந்தையும் கண்ணே மூடி அலறிடா
துறங்கும் போது
பேந்தையூர்க் குள்ளன் மட்டும் பெருவிழி
மூடா னுகி
வேந்தனின் வீட்டுத் தோட்ட வேலியைத்
தாண்டிச் சென்று
ஏந்திள நீரைக் கொள்ள ஏறினன்
தென்னே ஒன்றில். 2

" யாரடா ? என்னக் கேட்டு இறங்கிடும்
குள்ளன் தன்னேக்
காருடல் வேந்தன் ஓடிக் காலினேப்
பிடித்துக் கொண்டு
" யாரடா ? எங்கு வந்தாய் ?" என்னவும்
அந்தக் கள்ளன்
" காரியின் காய்ச்சல் தீரக் கணங்குழை
பிடுங்க " என்றுன். 3

" கணங்குழை என்றுல் என்ன ? கசடனே
உரைப்பாய் : மற்றும்
கணங்குழை பிடுங்க வந்த கள்வன் நீ
யாவன் ? உன்றன்

பிணமது தரையின் மீது வீழுமுன்
    பிசகி டாமல்
இணங்கியே உரைப்பாய்'' என்று இறுக்கமாய்ப்
    பிடித்தான் வேந்தன். 4

"புல்லினில் பலவும் உண்டு; அவற்றினில்
    அண்ணு! நான்முன்
சொல்லிய குழையும் ஒன்று. சொல்வதும்
    மெய்யே. என்பேர்
மல்லையன் என்பதாகும்; ஆயினும்
    மக்கள் என்னைச்
செல்லமாய்க் குள்ளன் என்றே செப்புவர்''
    என்ருன் கள்ளன். 5

"கணங்குழை தென்னை மீது கண்டதும்
    உண்டோ?'' என்ன,
"கணங்குழை அங்கு காணேன்; ஆதலால்
    இறங்கு கின்றேன்.
பிணங்கிய அண்ணு! உன்றன் பெருங்குரல்
    கேட்டு நானும்
வணங்கினேன்'' என்று கூறி ஓடினுன்
    கள்ளக் குள்ளன். 6

—நன்னன்.

## 4. பல்வகை

### தமிழ்

யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
    இனிதாவ தெங்கும் காணேம்;
பாமரராய், விலங்குகளாய், உலகனைத்தும்
    இகழ்ச்சி சொலப் பான்மை கெட்டு,
நாமமது தமிழரெனக் கொண்டிங்கு
    வாழ்ந்திடுதல் நன்ருே? சொல்லீர்!
தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
    பரவும்வகை செய்தல் வேண்டும்.

—பாரதியார்.

## 2. சிறுர் பொறுப்பு

இன்று குழந்தைகள் நீங்கள்—எனினும்
இனி இந்த நாட்டினை ஆளப்பிறந்தீர் !
இன்று......

நன்ருய்ப் படியுங்கள் நாட்டின் குழந்தைகாள் !
ஒன்ருய் இருங்கள் உயர்வினை எண்ணுங்கள் !
இன்று......

குன்றினைப் போல உடல்வன்மை வேண்டும் !
கொடுமை தீர்க்கப்போ ராடுதல் வேண்டும் !
தின்றதையே தின்று தெவிட்டுதல் இல்லாமல்
அன்றன்று வாழ்வில் புதுமைகாண வேண்டும் !
இன்று......

பல்கலை ஆய்ந்து தொழில்பல கற்றும்
பாட்டிற் சுவைகாணும் திறமையும் உற்றும்
அல்லும் பகலும்இந் நாட்டுக் குழைப்பீர்கள் !
அறிவுடன் ஆண்மையைக் கூவி அழைப்பீர்கள் !
இன்று......

—புரட்சிக் கவிஞர்.

## 3. இயற்கை வாழ்வு

பறந்து பறந்தெங்கும்—திரியும்
பறவை வாழ்வினைப்போல்
சிறந்த வாழ்வேதும்—இந்தச்
செகத்தில் கண்டதுண்டோ ?
சாதிச் சண்டையில்லை—ஓயாச்
சமயச் சண்டை யில்லை.
வேத சாத்திரங்கள்—கூறும்
விதி விலக்கு மில்லை.
தோட்டி களுமில்லை—உயர்ந்த
தொண்டை மானுமில்லை.
கோட்டை வீடுமில்லை—எளிய
குடியிருப்பு மில்லை.
குடி கெடுத்து விட்டுப்—பழிகள்
கோடி செய்துவிட்டுக்
கடவுளை வணங்கி—நிதமும்
கண்ணீர் விடுவதில்லை.

—கவிமணி–தேசிக விநாயகம் பிள்ளை.

# அருஞ்சொற்பொருள்

## 1. வாழ்த்து

**1. தேவாரம் :** மாசு+இல்=மாசில் - குற்றமற்ற ; மாலை - மாலை நேரம் ; வீங்கு - காலம் நீள்கின்ற ; மூசு - மொய்க்கும் ; அறை - ஒலிக்கும் ; நீழல் - நிழல்.

**2. திருவாசகம் :** சீருடையான் - புகழை உடையவனே ; வைத்தாய்க்கு - தங்கச் செய்த உனக்கு ; எம்பெருமான் - எமது பெரியோனே ; மாறு - கைம்மாறு. மாறு செய்யும் வகை என்? அறியேன் என்க.

**3. தேம்பாவணி :** கதி நீயே - என்னைக் காப்பவனும் நீயே ; உயிரன்னாய் பிறந்தாய் - உயிர் போன்றவனாய்ப் பிறந்துள்ளாய் ; சிறை - பிறவியாகிய சிறை ; துகள் பூட்டிய - பாவங்களால் பூட்டப்பட்ட ; திறன் செய்து - அருள் செய்து - உனது வலிமையையும், கருணையையும் கொண்டு ; இரங்காயோ - இரக்கமுடன் செய்யமாட்டாயோ ?

**4. திவ்யப் பிரபந்தம் :** மன்னி - நிலைத்து ; நந்தாத - குறையாத ; கொழுஞ்சுடரே - செழுமையான ஒளி போன்றவனே; நம்பி - ஆண்களில் சிறந்தவன்.

**5. சீறாப் புராணம் :** இதயாசனம் - உள்ளமாகிய இருக்கை ; தொடர் - பிறவிகள் தோறும் தொடரும்.

**6. திருக்குறள் :**

1. முதல - முதற்காரணமாக உடையன, ஆதிபகவன் - முதற் கடவுளை ; முதற்று - முதற்காரணமாக உடையது.

2. வாலறிவன் - தூய அறிவுருவானவன்.

3. மலர் மிசை - உள்ளமாகிய மலரின் மேல் ; நீடு - நெடுங் காலம்.

4. வேண்டுதல் வேண்டாமை - விருப்பு வெறுப்பு.

5. இருள்சேர் - அறியாமையால் ஏற்படுகின்ற ; பொருள் - மெய்ப்பொருள் ; புரிந்தார் - விரும்பியவர்.

6. பொறிவாயில் ஐந்து - ஐம்பொறிகளாகிய வாயில்.

8. அறவாழி - அறக்கடலாகிய ; பிறஆழி - பிறகடல்கள்.

9. கோள் இல் - சுவை முதலியவற்றை உட்கொள்ள முடியாத ; குணமில - பயனில.

10. சேர்ந்தார் நீந்துவர் ; சேராதார் நீந்தார் என்க.

## 2. அறவுரை :

**1. திருக்குறள் :**

1. விசும்பு - வானம் ; துளி - மழைத்துளி.

2. செய்கலாதார் - செய்ய இயலாதவர்கள்.

3. ஈன்ற பொழுதின் - குழந்தையைப் பெற்றபொழுது அடைந்த மகிழ்ச்சியை விட ; கேட்ட - பிறர் கூறுவதைக் கேட்ட.

4. இனிய - இன்சொற்கள் ; இன்னாத - கடுஞ் சொற்கள் ; அற்று - அத்தகையது.

6. ஏதிலார் - அயலார் ; காண்கிற்பின் - காணவல்லவனாயின்.

9. அற்றது - செறித்துவிட்டமையை ; போற்றி - கவனித்து.

10. கட்டபின் - களையெடுத்தபின் ; காப்பு - காவல்.

**2. நீதி வெண்பா :**

1. இரும் - பெரிய ; வாய்த்த - பொருந்திய ; நோக்கரிய - பார்த்தற்கரிய ; பைங்கண் - பசுமையான கண் ; துர்ச்சனர் - கொடியோர்.

2. கொம்புளது - மாடு முதலியவை ; வெம்பு கரி - மதங் கொண்ட யானை ; வம்புசெறி - வம்பு மிக்க.

3. சின்னம்பட - சிதையும்படி ; நலிந்தாலும் - வாடினாலும் ; நயந்து - விருப்புடன்.

4. நிந்தை - பழி ; தாலம் - பனைமரம் ; ஆன் - பசு.

5. காதலித்து - அன்புகொண்டு ; மானுவரோ - ஒப்பாவரோ ; வான்மீன் - நட்சத்திரம் ; இலகிடினும் - விளங்கினாலும்.

**3. அறநெறிச் சாரம் :**

1. வன்சொல்களைகட்டு - கடுஞ்சொல்லாகிய களையை அகற்றி ; எருவட்டி - எருவிட்டு ; பைங்கூழ் - பசிய பயிர் ; சிறுகாலை - இளம் பருவத்திலேயே.

2. வைகலும் - நாள்தோறும் ; மெல்லென்றல் - மென்மையடைதல் ; சால அரிது - சிறிதும் இல்லை ; கீழ்கட்கு - கயவர்கட்கு ; வல்லென்னும் - இரக்கமற்றுத் திண்ணியதாகவே இருக்கும்.

3. புனைபடை - போர்க்கருவிகளை அணிந்துவரும் படை; தற்காப்பான் - தன்னைக் காப்பாற்றிக் கொள்ள ஓடுபவனை; வினை - போரை; அடிவீழ்தல் - அவன் காலில் வீழ்ந்து வேண்டுதல்; பறைந்திருந்த - (ஒன்றும் செய்யாமல்) கத்திக் கொண்டிருந்த; என்றற்று - என்று கருதி அதனை வைத்துக் கொள்வதைப் போன்றது.

4. கொள்ளி வைத்தாற்போல் - தீயினாற் சுட்டதைப் போன்று; தவம் பிறிது ஒன்றும் வேண்டாம் என்க.

5. சால - மிக; வலிது கொடுத்து - வற்புறுத்திக் கூறி; மேற்கொண்டு ஒழுகுவார் - அடக்கியாளும் பெரியோர்; காலொடு கை - காலையும் கையையும்; நெய் - விளக்கெண்ணெய்.

**4. ஆசாரக்கோவை:**

1. பொறை - பொறுமை; ஒப்புரவு - உலக நடை முறை; ஆற்ற - மிக; சொல்லிய - அறிஞர்களால் சொல்லப்பட்ட; ஆசார வித்து - ஒழுக்கங்களுக்குக் காரணம்.

2. நெறிப்பட்டார் - நன்னெறியில் ஒழுகுபவர்; திளையார் - மூழ்கியிருக்க மாட்டார்கள்; காய்ந்தது எனினும் - எண்ணெய் இன்றித் தலை காய்ந்திருந்தாலும்; ஆடார் - கழுத்துவரை குளிக்க மாட்டார்கள்.

3. கிடந்துண்ணார் - படுத்துக் கொண்டு உண்ணலாகாது; வெள்ளிடை - வெட்ட வெளி; சிறந்து - விரும்பி; இறந்து - நெறி கடந்து.

4. சுடரிடை - விளக்குக்கும் மற்றொருவருக்கும் இடையில்; மாசுணி - பிறர் உடுத்த அழுக்குத் துணி; வளி - காற்று; உறைப்ப - பிறர்மேல் பட; காட்சி - அறிவு.

5. அசையாத - ஒழுக்கத்திலிருந்து தவிராத; படிறு - வஞ்சனைச் சொல்; பட்டி உரை - நாவடக்கமற்ற சொல்; வசை - பழி; புறனும் - புறங்கூறுதலும்.

## 3. கதை

**கள்ளக்குள்ளன்:** காரிருள் - கரிய இருள்; ஏந்திளநீர் - தென்னை மரம் தாங்கிக்கொண்டுள்ள இளநீர்; கொள்ள - பறிக்க; காரி - கரிய பசு; பிசகிடாமல் - தவறாமல்; இணங்கியே - உண்மையோடு பொருந்தும்படி; பிணங்கிய - சினங்கொண்ட.

---